REGD. No. M. 1190.






# ஆனந்த போதினி



# ANANDA BODHINI.



5/8



Vol. 28. பொருளடக்கம். No. 5

சித்திரபானுவரு கார்த்திகைமீ ௩



| உள்ளடக்கம். | பக்கம். |
|---|---|
|  |









# “ஆனந்தபோதினி”

## சந்தா விவரம்

| | | |
|---|---|---|
| வருடம் 1-க்கு தபாற்கூலி யுள்பட | இந்தியா, ஸிலோன் ... ... | 1—0—0 |
| | பர்மா ... ... | 1—4—0 |
| | பினங், ஸிங்கப்பூர் தென் ஆப்ரிக்கா, பசரா, மெசபொடேமியா முதலிய வெளிநாடுகளுக்கு | 2—0—0 |
| நடந்துகொண்டிருக்கிற வருடத்திய தனிச் சஞ்சிகை விலை | | 0—2—0 |
| சென்ற வருடங்களின் தனிச் சஞ்சிகை விலை | | 0—3—0 |

**ஒரு வருடத்திற்குக் குறைந்த சந்தா கிடையாது.**

(1) சந்தாதாரராய்ச் சேருகிறவர்கள் பூரணமாகப் பெயரை எழுதி யனுப்பவேண்டும்.

(2) சந்தாத் தொகையை முன்னுடிச் செலுத்தியாவது அல்லது வி. பி. யில் பணம் கட்டியாவது பத்திரிகை பெற்றுக்கொள்ள வேண்டும். எப்போது சேர்ந்தாலும் அவ்வருட ஆடிமாத முதல்தான் கணக்கு வைக்கப் பட்டு ஆடிமாத சஞ்சிகை முதல், பத்திரிகை அனுப்பப்படும்.

(3) சஞ்சிகையை வி. பி. யில் வரவழைப்போர்க்கு ரிஜிஸ்டர் சார்ஜ் 3-அணுவோடு (18-4-1921 முதல மணியார்டர் கமிஷன் 10-ரூபா வரையில் 2-அணு வாகையால்) அந்தக் கமிஷன் 2-அணு, வி. பி. க்குத் தபால் சார்ஜ் 0-0-6. ஆக 0-5-6-அதாவது 6-அணு சேர்த்து ரூபா 1-6-0 கட்டி வி. பி. யைப் பெறவேண்டும். மணியார்டர் அனுப்பினுல் 1-2-0 மட்டுமே யாகும். ஆதலால் முன்னுடி மணியார்டர் அனுப்பிப் பத்திரிகை பெற்றுக்கொள்வதே நலம், இதைக் கவனிக்கவும்.

(4) யாருக்கேனும் சஞ்சிகை சேராவிட்டால் அவர்கள் அம் மாதம் 15-ம் தேதி வரையில் பார்த்து அதற்குமேல் அதே தமிழ்மாத முடிவிற்குள் அவ்விவரத்தைத் தெரிவித்தால்தான் மறுபடி யனுப்பக்கூடும். பிறகு தெரிவிப்போர் கிரைய மனுப்பிப் பெறவேண்டும்.

(5) இடம் மாறும் சந்தாதாரர்கள் அடுத்த சஞ்சிகை தங்களுக்குப் புது விலாசத்திற்கு வந்து சேரும் வண்ணம் தபாலாபீஸோடு ஏற்பாடு செய்துகொண்டு நமக்குப் புது விலாசத்தை யறிவிக்கவேண்டும். இன்றேல் அடுத்த சஞ்சிகை பெரும்பாலும் பழைய விலாசத்திற்கே போய்விடும். அதற்கு நாம் பொறுப்பாளியல்ல.

(6) சந்தா நம்பரைக் குறிக்காமல் எழுதும் கடிதங்கள் கவனிக்கப்பட மாட்டா. அத்தகைய கடிதங்களால் நேரிடும் தவறுதல்களுக்கு நாம் பொறுப்பாளி யல்ல. பதில் விரும்புவோர் ரிப்ளை கார்டாவது தபால் பில் லையாவது அனுப்பினுலன்றி விடை யளிக்கப்பட மாட்டாது.

(7) வியாசங்களை எழுதுவோர் சுத்தமாக இலக்கணப் பிழையின்றித் தங்கள் உண்மைப் பெயருடன், மத தூஷணை, பிறர் தூஷணை, ராஜாங்க விரோதம் முதலியவையின்றியும், பொது ஜனங்கள் விரும்பக்கூடியனவாக வும் எழுதவேண்டும்.

| | | | |
|---|---|---|---|
| Life Subscription ஜீவிய சந்தா | இந்தியா, ஸிலோன் | ரூபா | 15—0—0 |
| | பர்மா, முதலிய வெளிநாடுகளுக்கு | ,, | 25—0—0 |


*Telephone* No. 3005. *Telegram* :—“Ananda Bodhini”, Madras.

விலாசம்:—கா. முனிசாமி முதலியார், “ஆனந்தபோதினி”

6, லாயர் சின்னதம்பி முதலி தெரு, தபால் பெட்டி நெ. 167, சென்னை.

உ

ஓம

பரப்பிரஹ்மணே நம:


# ஆனந்தபோதினி

" எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு."—திருவள்ளுவர்.





| தொகுதி 28 | சித்திரபானு௵ கார்த்திகை௴ ௧௳<br>1942௵ நவம்பர்௴ 16௳ | பகுதி 5 |
|---|---|---|


## கடவுள் வணக்கம்.

சோதியே! சுடரே! சூழொளி விளக்கே!
　　சுரிகுழற் பணைமுலை மடந்தை
பாதியே! பரனே! பால்கொள் வெண்ணீற்றாய்!
　　பங்கயத் தயனு(ம்) மால் அறியா
நீதியே! செல்வத் திருப்பெருந் துறையில்
　　நிறைமலர்க் குருந்தமே வியசீர்
ஆதியே! அடியேன் ஆதரித்து அழைத்தால்
　　அதெந்துவே என்று அருளாயே. (1)

---

நிருத்தனே! நிமலா! நீற்றனே! நெற்றிக்
　　கண்ணனே! விண்ணுளோர் பிரானே!
ஒருத்தனே! யுன்னை ஓலமிட்டு அலறி
　　உலகெலாந் தேடியுங் காணேன்;
திருத்தமாம் பொய்கைத் திருப்பெருந் துறையில்
　　செழுமலர்க் குருந்தமே வியசீர்
அருத்தனே! அடியேன் ஆதரித்து அழைத்தால்
　　அதெந்துவே என்று அருளாயே. (2)

---

எங்கள் நாயகனே! என் உயிர்த் தலைவா!
　　எலவார் குழலிமார் இருவர்
தங்கள் நாயகனே! தக்கநற் காமன்
　　தனதுடல் தழல்எழ விழித்த
செங்கண் நாயகனே! திருப்பெருந் துறையில்
　　செழுமலர்க் குருந்தமே வியசீர்
அங்கணா! அடியேன் ஆதரித்து அழைத்தால்
　　அதெந்துவே என்று அருளாயே. (3)




# மனமிருந்தால் மார்க்க முண்டு

“சுதந்திர லட்சியம் பாதிக்கும்படியாக எந்த விடத்தைத் தாக்கிய போதிலும் அவ்விடங்களைப் பாதுகாக்க வேண்டுமென்பது நமது உறுதியான நோக்கம். எதிரி பிரதேசத்தில் போரை நடத்தி ஆக்கிரமிப்புக்காளான நாடுகளைத் துரிதமாக விடுவிக்க வேண்டுமென்பதும் நமது உத்தேசம்.” இது சென்ற வாரம் லண்டன் பார்லிமெண்டு கூட்டத்தைக் கலைப்பதாகத் தெரிவித்து மன்னர்பிரான் செய்த பிரசங்கத்திலுள்ள வாசகமாகும். சுதந்திரத்தையும் ஜனநாயகத்தையும் பாதுகாக்கவும், அச்சு நாடுகள் ஆக்கிரமித்திருக்கும் சிறு தேசங்களின் உரிமையைத் திருப்பிப்பெற உதவவுமே தாங்கள் யுத்தந் தொடங்கி நடத்தி வருவதாகப் பிரிட்டனின் யுத்த நோக்கத்தைப் பிரமுகர்கள் பலர் இதுவரை அடிக்கடி பறைசாற்றி வந்திருக்கிறார்கள். அக்கொள்கையைத்தான் இப்போது சக்கரவர்த்தி உறுதிப்படுத்தும் முறையில் வேறு வார்த்தைகளில் கூறியிருக்கிறார். பிரிட்டனின் யுத்த நோக்கம் உலகில் சுதந்திரத்தையும் ஜனநாயகத்தையும் நிலைநாட்டுவதுதான் என்று கூறப்பட்டதுமே, அப்படியானால், இந்தியாவின் விஷயமென்ன? பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தில் கட்டுண்டு கிடக்கும் இந்தியாவுக்குச் சுதந்திரம் அளித்து ஜனநாயக அரசாங்கம் ஏற்பட ஏன் உதவி செய்யக்கூடாது?’ என நம் தேசியத் தலைவர்கள் கேட்கலாயினர். இதற்கு நாளதுவரை சரியான பதிலில்லை. என்னென்னவோ சாக்கு போக்குகள் கூறப்பட்டும், காரியங்கள் நடத்தப்பட்டும் வந்திருக்கின்றனவே, இந்திய சுதந்திரக் கோரிக்கைக்கு மனமுவந்து சம்மதமளிக்கப் பிரிட்டிஷ் சர்க்கார் முன்வரவில்லை. இந்நிலையில் அரசர் பெருமான், “யுத்தம் நின்றவுடன் இந்தியர்களால் தயாரிக்கப்பட்ட அரசியலை அடிப்படையாகக் கொண்டு இந்தியாவுக்குப் பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தில் பரிபூரண சுயாட்சி அளிக்க வேண்டுமென்ற விருப்பத்தை என் சர்க்காரும் பொது மக்களும் இந்திய மன்னர்களுக்கும் மக்களுக்கும் தெரிவித்தார்கள். இதற்

கிடையில் இந்திய சர்க்காரில் சேர்ந்து யுத்தத்தை நடத்தும்படி பிரதிநிதித்வமுள்ள இந்திய அரசியல் தலைவர்கள் அழைக்கப்பட்டனர். ஆனால் இது வரையில் இந்த யோசனையை அவர்கள் ஏற்றுக்கொள்ளாததற்காக நான் மிகவும் வருந்துகிறேன். இந்தியர்களிடையே ஒப்பந்த மேற்பட்டு துரிதமாகச் சிக்கல்கள் தீர்ந்து நல்லெண்ணம் பிறக்கும் என்று நான் நம்புகிறேன்'' என்று தெரிவித்திருக்கிறார். மன்னர்பிரான் பார்லிமெண்டு கூட்டங்களில் தாம் செய்யும் பிரசங்கங்களில் சாம்ராஜ்ய நாடுகளின் அரசியல் பிரச்சினைகளைப்பற்றிப் பிரஸ்தாபித்துப் பேசுவதென்பது இது வரை வழக்கத்தில் இல்லாததொன்றாகும். அப்படியிருக்க, அரசர் இந்தியப் பிரச்சினையைப்பற்றி இப்போது பேசினாரென்றால், அது இன்றைய யுத்த நெருக்கடியில் முக்கியமானதொன்றாக, பார்லிமெண்டு மெம்பர்களாலும், பிரிட்டிஷ் மக்களாலும் கருதப் படுகிறது என்பதே அதன் பொருளாகும். ஆனால் துரதிர்ஷ்ட வசமாக, அரசரின் பிரகடனம் இந்தியாவின் இன்றைய அரசியல் நெருக்கடியை ஓரளவேனும் தீர்த்து வைக்கக் கூடியதாக இல்லையென்பதை வருத்தத்தோடு தெரிவிக்க வேண்டியிருக்கிறது.

சர்க்கார் அழைப்பு விடுத்தும் பிரதிநிதித்துவமுள்ள இந்திய அரசியல் தலைவர்கள் இந்திய சர்க்காரில் சேர்ந்து ஏன் யுத்தத்தை நடத்தவில்லை என்பதற் குரிய காரணத்தை அரசர் கூறவில்லை. பொறுப்பு வாய்ந்த இந்தியத் தலைவர்கள்—இந்திய மக்களிடையே செல்வாக்கு பெற்றுள்ள இந்தியத் தலைவர்கள் சர்க்கார் அழைப்புக்கு அளித்த பதில் என்ன தெரியுமா! "யுத்தத்துக்குப் பின்னர் இந்தியாவுக்குச் சுயாட்சி அளிப்பதிருக்கட்டும். அதை அப்படியே ஒப்புக் கொள்ளுகிறோம். இதற்கிடையில் நாங்கள் உங்களுடன் யுத்தத்தில் ஒத்துழைக்க வேண்டுமானால், இந்தியாவில் உடனே தேசிய சர்க்கார் அமைப்பதற்கு ஏற்பாடு செய்து தாருங்கள்'' என்று அவர்கள் ஐரோப்பிய யுத்தத்தில் இந்தியா பங்கு எடுத்துக் கொள்வதற்குக் குறைந்த பக்ஷ நிபந்தனையைக் கூறினர். வைஸ்ராய் நிர்வாக சபை விஸ்தரிக்கப்படும் சமயத்தில் கிரிப்ஸ் நாடகமொன்று இந்திய அரசியல் அரங்கத்தில் நடைபெற்றதல்லவா! அதில் முக்கிய பாத்திரமாய் நடித்த ஸர். ஸ்டாபோர்ட் கிரிப்ஸ், இந்திய அரசியல் தலைவர்களோடு சம்பாஷணை நடத்திய சமயத்தில், 'இந்தியாவில் உடனே தேசிய சர்க்கார் அமைக்கப்படும்' என்று முதலில் வாக்குறுதி யளித்தார். ஆனால், பிரிட்டிஷ் சர்க்காரிடமிருந்து இதற்கு அங்கீகாரம் கிடைக்காததாலோ என்னவோ ஸர். கிரிப்ஸ் மேற்படி வாக்குறுதியைப் பின்னர் வாபீஸ் வாங்கிக் கொண்டார். இதனாலேயே ஸர். கிரிப்ஸ் சமரச தூது முயற்சி வெற்றி பெறாது போய் விட்டதே யொழிய, இந்தியத்

தலைவர்கள் இதற்கு எவ்விதத்திலும் பொறுப்பாளிக ளல்ல. ஆனால், ஸர். கிரிப்ஸ் இந்தியாவை விட்டுப் போனதும், இவ்வுண்மையை மறைத்து, தமது முயற்சி பலிக்காது போனதற்கு இந்தியத் தலைவர்க ளிடையே ஒற்றுமை யில்லாததே காரணம் என்று வீண் பழி கூறி வரலானார். நம் தலைவர்கள் ஸர். கிரிப்ஸின் அபத்தக் கூற்றை மறுத்து ஆணித்தரமாகப் பதிலளித்தனர். இந்தியப் பிரச்சினையில் சிரத்தையுடைய அமெரிக்க பிரமுகர்களில் ஒருவரான மிஸ்டர் லூயி பிஷர் என்பார் சமீபத்தில் "நியூயார்க் நேஷன்" என்ற பத்திரிகையில் எழுதியுள்ள கட்டுரையில், ஸர். கிரிப்ஸ் தூது முறிந்ததற்குக் காரணம், தேசிய சர்க்கார் அமைப்பதாக வாக்களித்துப் பின் அதை வாபீஸ் வாங்கிக் கொண்டதேயாகும் என்று அழுத்தந் திருத்தமாகக் கூறி, இதற்குரிய ஆதாரங்களை யெல்லாம் விரிவாக எடுத்துக் காட்டியிருக்கிறார்.

மேலும், மி. பிஷர், "இந்தியாவில் பெரிய சக்தியாக விளங்குகிறவர் காந்திஜீ தான்" என்று என்னிடம் இந்திய வைஸ்ராயான லார்டு லின்லித்கோ சொன்னார். அப்படி சொன்ன அவரே இப்போது காந்திஜீயைக் கைது செய்ய உத்தரவிட் டிருக்கிறார். இதற்காக நாம் எல்லோரும் கஷ்டப்பட வேண்டி வருமென நினைக்கிறேன். காந்திஜீ முதலியவர்களைச் சிறையி லிட்ட வினைக்குப் பதில் சொல்லி யாகவேண்டும்" என்று கூறி 'அமெரிக்கரின் அந்தரங்க சுத்தியைக் காட்ட இந்தியாவே உரைகல்' எனத் தம் நாட்டினர்க்கு வேண்டுகோள் விடுத்திருக்கிறார். "இப்போது ஏதாவது செய்ய முடியுமா? முடியும் என்பது என் அபிப்பிராயம். காந்திஜிக்குப் பழி வாங்கும் மனோபாவமில்லை. அவரை விடுதலை செய்யும் பட்சத்தில் பிரிட்டிஷாரை மன்னித்து விடுவார். யுத்தத்தை ஆதரிப்பதற்காகப் பிரிட்டிஷாருடன் பேச்சு வார்த்தைகளைத் தொடங்குவார்" என்று யோசனை கூறும் மி. லூயி பிஷர் 'வெளியார் கடுமையாகத் தார் போடாமல் பிரிட்டிஷாருக்குத் திடீரென்று மூளைத் தெளிவு ஏற்படுமென்று எதிர்பார்ப்பதற்கில்லை. அமெரிக்காதான் முயற்சி செய்யக்கூடும்......இந்தச் செலவு மிகுந்த யுத்தத்தில் அமெரிக்கா போராடும் காரணம் என்ன வென்பதை நிரூபிக்க இந்தியப் பிரச்சினை ஒரு உரைகல்" என்று வற்புறுத்திக் கூறியிருப்பதை அமெரிக்க ஜனாதிபதி மி. ரூஸ்வெல்டும், அமெரிக்க மக்களும் கவனிக்க வேண்டும். பிரிட்டிஷ் சர்க்காரும் மி. லூயி பிஷர் கட்டுரையைக் கண்டு அறிவு பெற்றிருக்க வேண்டும். மனமிருந்தால் மார்க்க முண்டு. இச்சமயத்திலும் பிரிட்டிஷ் அதிகாரவர்க்கம் மனங்கொண்டால் இந்திய அரசியல் நெருக்கடியை ஒரு நொடியில் தீர்த்துவிடலாம். ஆனால் அவர்கள் அவ்விதஞ் செய்வார்களா?

# கனவு 

(இரட்டணை. R. ருக்மணி.)



ஆம்! நினைத்துப் பார்த்தால் எல்லாம் கனவுதான்! தற்போது மண்ணில் உருண்டு கிடக்கின்ற இரத்தின மகுடங்கள், ஒரு காலத்தில் பல வல்லரசுகளின் சென்னியில் இருந்து விளங்கியதும் இப்போது கனவாய்த்தான் ஆயின! இன்று ஒளிரும் கிரீடங்களும் நாளை கனவாகத்தான் ஆகப் போகின்றன! இப்பேர்ப்பட்ட கனவிலே, தினம், எப்பேர்ப்பட்ட விந்தைகள்!

அவ்வளவு தூரம் போவானேன்? இந்த வினாடிக்கு முன் நமது கழிந்த காலத்தில் நிகழ்ந்தனவற்றை நினைத்துப் பார்த்தால் எல்லாம் நடந்தவையாகவா?—நாம் அனுபவித்தவையாகவா தோன்றுகின்றன? நாம் இரவில் காணும் கனவிற்கும், இறந்த கால—எதிர் காலங்களில், நடந்த—நடக்கப் போகும் நிகழ்ச்சிகளுக்கும் அந்த வித்தியாசம் இருப்பதாகவே புலப்பட வில்லை.

இந்தக் கனவுகளைப் பல வகையாகப் பிரிக்கலாம். தொடர் கனவு; கனவுக்குள் கனவு; செயலுறு கனவு; மொழியுறு கனவு; காரணக் கனவு; பயனுறு கனவு. இன்னும் பல. கனவைப் பற்றி ஆராய்பவர்கள் இன்னும் எவ்வளவோ சங்கதிகளைத் தெரிந்து கொள்ளலாம். நான் அறிந்தவற்றைக் கூறுகிறேன்.

தொடர் கனவு என்றால் தொடர் கதை போன்றது. அதாவது ஒரு கனவு கண்டுகொண்டு வரும்போதே ஏதோ ஓர் காரணத்தில் விழிப்பு ஏற்பட்டு விழித்துக் கொண்டோமானால், அந்தக் கனவு பாதியில் அரை குறையாக நின்றுவிடுகிறது. முழுதும் காண முடியாமற் போயிற்றே என்று கூடச் சில சமயங்களில் விசனிக்கிறோம். ஆனால், சில சமயங்களில் கனவு கலைந்து எழுந்தவுடன் மீண்டும் தூங்கும்படி நேரிடுகிறது. அப்போது அக் கனவின் விட்டகுறை தொடர்ந்து விடுகிறது.

இது, அவ்வளவு ஆச்சரியமல்ல. முதல் நாள் கண்டு குறையாக விடுபட்ட கனவு, மறுநாள் தூக்கத்தில், விடுபட்ட இடத்திலிருந்து அடையாளக் குறைவு இல்லாமல் தொடர்கிறது! இப்படித் தொடரும் கனவு, சேர்ந்தாற் போல் நான்கு நாட்கள் கூடத் தொடர்கின்றது. அதிலும், சம்பந்தமில்லாமல்—தொடரும் தொடர்கதை போலல்லாமல், அதிக சம்பந்தம் உடையதாகவே மறுநாள் தொடர்கிறது! அந்தக் கட்டம்!!

நிச்சயமானது என்று நாம் நினைத்துக் கொண்டிருக்கும் வாழ்க்கையிலே, நேற்றைக்கு முன் வாழ்க்கைச் சம்பவங்கள் எப்படித் தொடர்ந்து வந்தனவோ, அப்படித்தான் இந்தத் தொடர் கனவும் கூட!

அதிருக்கட்டும். கனவுக்குள் கனவு! என் சிற்றறிவிற்கு இது ஒரு அதிசயம்! ஏனென்றால், இந்தப் பூவுலகில் இருந்துகொண்டு, தூங்கப் போனால், அந்தத் தூக்கத்திலே காணும் அதிசய வுலகத்தைக் 'கனவு' என்கிறோம்! அந்த அதிசய வுலகத்திலே நாம், 'டிக்கட்' இல்லாமல் சஞ்சரிக்கும் போது, ஓரிடத்திலே அசந்து தூங்கப் போகிறோம்! அந்தத் தூக்கத்திலே மற்றோர் உலகத்தைக் காணுகிறோம்; அங்குத் தூங்கி, மற்றோர் உலகத்தைக் காணுகிறோம்! இப்படியே படிப்படியாகக் கண்டு கொண்டே போகிறோமே, அந்த உலகங்களுக்கெல்லாம் என்ன பெயர்?

பிறகு, ஒவ்வொரு உலகமாகத் திரும்பும் போது, அங்கங்கு விழிப் பேற்பட்டுத் திரும்பவும் கன வுலகத்தில் வந்து இருந்துகொண்டு, அங்கு ஏற்படுத்திக்கொண்ட சிநேகிதர்களிடம் நாம் கண்டதையெல்லாம் சொல்லி, இப்படியும் கனவு உண்டா என்கிறோம்! அதே சமயத்தில் விழிப் பேற்பட்டு, பூவுலகத்திற்கு வந்து சேருகிறோம்! அப்பொழுதுதான் நம் அதிசயம் பூத்து மலர்கிறது! அதுமட்டுமா? இந்தப் பூவுலகத்தில் இருந்து, விழித்துக் கொண்டோமானால், அப்புறம், மெய் உலகம் தெரியும்! அங்கிருந்து வேறு, அதிசயம் அடைவோம்! அதுதான், உண்மையான உலகம்! உண்மையான உலகத்தை, இந்தப் பொய் உலகத்தில் இருந்து நான், கண்டுபிடித்தேனே, பின் ஏன் நான் மெய் உலகத்தில் உண்மையாகப் போய் இருக்கக்கூடாது? பூவுலகிலேயிருந்து விழிப் பேற்படாததுதான், அதற்குக் காரணம்! விழிப் பேற்படுங் காலமும் வரும்! அப்போது, பூவுலக வாழ்க்கை "பொய்" என்று நினைக்க நேரமாகாது.

அப்புறம் செயலுறு கனவு! இது சாதாரணம்! அதாவது, கனவுலகிலே ஏற்பட்ட செயல், இந்த வுலகிலே வந்து முடிவு பெறுவது, அதற்கு நான் கண்டதையே கூறுகிறேன். உதாரணமாக:

நான் கன வுலகத்தில் வசித்தேன். அப்போது தோட்டத்திற்குப் போனேன். அங்கு ஒரு பெரிய குரங்கு என்னைத் துரத்தியது. நான், வீட்டிற்குள் ஓடிவர ஆரம்பித்தேன். வாயிற்படி தடுத்துக் கீழே விழுந்தேன். அதே சமயம், என் படுக்கையில் நான், ஒரு 'சாண்' உயரம் தூக்கிப் போடப்பட்டேன். பிறகு, ஓர்நாள். என் கணவனிடம் சண்டை. நான் பலமாக வாயாடினேன். பக்கத்தில் கிடந்த ஒரு கொம்பை எடுத்து, என் கணவர் 'கண்ணுமண்ணு' தெரியாமல் என் முகத்தில் ஒரு இறக்கு இறக்கினார். அதே சமயம்! பரணில் கிடந்த ஓர் குச்சு, எலியால் என் முகத்தில் தள்ளப்பட்டது. நான், ஐயோ என்று கதறிக்கொண்டு துள்ளி எழுந்தேன். அங்கு அப்பொழுது என் கணவரையுங் காணோம், கிணவரையுங் காணோம். எலி, அவசரமாக ஓடியதைத்தான் கண்டேன். வெட்கம் தலையைச் சுழற்றியது!

மொழியுறு கனவும் இதே மாதிரிதான். ஆனால், சிறிது வேறுபாடு உண்டு. அதாவது கனவுலகத்திலே சில சமயங்களில் நமது உண்மைக் குரலிலேயே—வாயாலேயே பேசுவது. நாம், பல விடங்களில் பல சமயத்தில் இதைக் கண்கூடாகக் கண்டிருக்கிறோம். தூங்கிக் கனவு கண்டு கொண்டு இருப்பாரிடம்-ஏன்?—என் கணவர் யார் யார் வீட்டிற்கு இன்று போய் வந்தார் என்பதை அறிய, அவர் தூங்கும்போது அவரை லேசாக எழுப்புவேன். அவர், கனவுலகத்தில் இருந்து கொண்டு 'தக்கடா தக்கடா'வாகக் குழறுவார்—இல்லை. சொல்லுவார்; நான் புரிந்து கொள்வேன். உடனே ஒரு நிமிஷத்தில் அவரை பூவுலகத்தில் இறக்கிச் சண்டை வாங்குவேன். என்ன கேட்கிறீர்கள்? அவர் பெயரா?..."சந்திகுமார்!"

காரணக் கனவு. நாமாக உண்டாக்கிக் கொள்வது. அதாவது எப்போது பார்த்தாலும் ஒன்றைப்பற்றி அதிகம் சிந்திக்க நேர்ந்தால் அச் சிந்திப்பே தூக்கத்தில் கனவாக மாறுவது. இதற்குக் காரணம் ஒன்றைப்பற்

(208-ம் பக்கம் பார்க்க.)

# கீழ் நாட்டு விவாகங்கள்

(கே. ராஜாராம்.)

நமது நாட்டில் காதல் மணங்களும், கட்டாய மணங்களும் நடைபெறுகின்றன. காதல் மணங்களை விடக் கட்டாய மணங்களே அதிகம். கட்டாய மண மென்றால் தாய் தந்தையர் அல்லது உறவினர்களின் உபத்திரவத்தின் பேரில், மணமகன், மணமகள் இவர்களுக்கு விருப்பமிருந்தாலும் இல்லாவிடினும் கட்டாயமாகக் கல்யாணம் செய்து வைத்தல் என்று அர்த்தம். இந்தியாவில் ஜாதி, மதக் கட்டுப்பாடு அதிகமாக இருப்பதால் கலப்பு மணங்கள் ஏற்படுவது அவ்வளவு அதிகமில்லை. எனினும் மிகக் குறைந்த அளவில் கலப்பு மணங்களும் நிகழ்கின்றன. கல்யாணத் தரகர்கள் மலிந்து காணப்படுவது நம் நாடு. அவர்களாலும் மணங்கள் அநேகம் நடைபெறுகின்றன.

நம் நாட்டைப் பற்றித் தான் நமக்குத் தெரியுமே. இனி, கிழக்கு நாடுகளில் எவ்விதம் விவாகங்கள் நடைபெறுகின்றன என்பதைத் தெரிந்து கொள்வோம். பொதுப்படையான, மேலெழுந்தவாரியாக வுள்ள சில விஷயங்களைத் தான் தெரிந்துகொள்ள முடியும் என்று நினைக்கிறேன். பரவாயில்லை; விவாகம் என்றாலே நீங்கள் படிக்காம லிருப்பீர்களா, என்ன? சரி, இனி மேலே கவனியுங்கள்.

பர்மா:—இங்கு வெகுகாலம் வரை விவாகங்கள் கல்யாணத் தரகர்களாலேயே நிச்சயிக்கப்பட்டு நடந்து வந்தன. எனினும், கடைசி முடிவு பெண்ணின் பெற்றோரையும், மாப்பிள்ளையின் பெற்றோரையும் சார்ந்திருந்தது. காலம் மாறியது. முறையும் மாறியது.

தற்பொழுது, அவர்கள் விஷயமே வேடிக்கையாகத் தானிருக்கும். ஒரு யுவன் ஒரு யுவதியைக் காதலிக்கிறான் என்று வைத்துக் கொள்வோம். இருவரும் விவாகம் செய்துகொள்ள விரும்பினால், பிறர்க்குத் தெரியாமல் எங்காவது ஓடிச் சென்று, சிலகாலம் வசித்து வருவர். இச்சமயத்தில் இளைஞனின் பெற்றோரும் பெண்ணின் பெற்றோரும் அவர்கள் இருவரும் ஓடியதன் அர்த்தத்தை அறிந்து கொள்வர். ஓடிப்போன காதலர்கள் திரும்பிய பிறகு, உறவினர்களின் சம்மதத்தை எல்லாம் கேட்டறிந்து, அவர்கள் மறுக்காத பட்சத்தில் கல்யாணத்திற்கு சம்மதிப்பர். கல்யாணத்திற்கு நாள் குறித்து, அந்நாளில் தங்கள் குருவை அழைத்து வந்து விவாகத்தை முடித்து வைப்பர்.

சில சமயங்களில், மணம் புரிந்து கொள்ள விரும்பும் ஆடவனும் அணங்கும், வேறிடத்திற்கு ஓடாமல், தத்தம் பெற்றோர்களிடம் 'நைஸாக' விருப்பத்தைத் தெரிவிப்பர். பெற்றோர்கள் இஷ்டப்படாவிடில் முன் கூறியது போல் எங்காவது ஓடிக் கணவனும் மனைவியுமாக வாழ்ந்து வருவர்.

பிலிப்பைன்:—முற்காலத்தில் இங்கு விவாகங்கள் ஒரு தனி முறையில் நடந்து வந்தன. அக் காலத்தில் மக்களிடையே நான்கு வகுப்பினரே இருந்தனர். அவர்கள்—தலைவர்கள், சுதந்திர மக்கள், ஊழியர்கள் (Serfs) அடிமைகள் என்னும் நால் வகை வகுப்பினர். தலைவர்கள் தான் ஆட்சி

புரிபவர்கள் ; சுதந்திர மக்கள் என்போர் நிலச் சொந்தக்காரர்கள் ; கூலியர்கள் தான் உழைப்பாளிகள். ஆனால் கூலியர்கள் வீடுகளும், சொத்துக்களும் வைத்துக் கொள்ள அனுமதிக்கப்பட்டிருந்தனர். அடிமைகள் என்பவர்கள் சொத்து, சுதந்திரம் ஒன்று மில்லாமல் எஜமானர்களின் கீழ் வேலை செய்து வந்தனர். அடிமைகள் தான் எல்லோருக்கும் கடையர்களாகக் கருதப்பட்டு வந்தனர்.

தலைவர்கள் வீட்டு மணங்கள் கல்யாணத் தரகர்களால் நிச்சயிக்கப்படும். சுபதினம் பார்த்து கல்யாணத்தை நடத்துவர். கல்யாண நாளில் தரகர் பெண்ணைத் தன் தோளில் தூக்கிக்கொண்டு மாப்பிள்ளை வீட்டிற்குச் செல்வார். தோளில் மீது வீற்றிருக்கும் பெண், அப்பொழுது பொல்லாத 'பிகு' வெல்லாம் செய்வாள். மாப்பிள்ளை வீடடைந்ததும், தன் மாமனார் தனக்கு ஒரு அடிமையைப் பரிசாகத் தரும் வரை, தரகரின் தோளை விட்டு இறங்க மாட்டாள். மனிதனுக்கு மனிதனையே பரிசாகத் தரும் வழக்கம் அப்பொழுது அங்கிருந்து வந்தது. இன்னும் பாருங்கள் !

ஒரு அடிமையைப் பரிசாக அடைந்து, வீட்டினுள் நுழைந்த பின்னரும் மேற்கொண்டு நடக்க வேண்டிய காரியங்களை நடைபெற இணங்க மாட்டாள். இப்பொழுதும் ஒரு அடிமையை பரிசாகக் கொடுப்பார்கள். அதன் பின்னர் தான் கணவனோடு சாப்பிடச் சம்மதிப்பாள்.

பிறகு, கல்யாணத்திற்காக அழைக்கப்பட்ட வயது முதிர்ந்த பெரியவர் ஒருவர் எல்லோரையும் ஆசீர்வதிப்பார். இச் சமயத்தில் ஒரு கிழவி தட்டு நிறைய அரிசி எடுத்து வந்து தம்பதிகளை அதைத் தொடச் செய்து, பிறகு அரிசியைப் பந்துக்களின் மீது சிதறி எறிவாள். இவ்விதம் செய்வது சந்தோஷத்திற்கு அறிகுறியாகும் என்று கருதுகிறார்கள். நம் நாட்டில் ஹிந்துக்கள் மஞ்சளரிசி எறிவதில்லையா, அது போலத்தான் பிலிப்பைன் மக்களும் என்று வைத்துக் கொள்ளுங்களேன்.

தாழ்ந்த வகுப்பினர் விவாகங்கள் மிகவும் எளிதாக இருக்கும். மணமகன், மணமகள் இருவரும் சேர்ந்தாற் போல் ஒரே பாத்திரத்தி விருந்து உணவு உண்ணவோ, ஏதாயினும் பருகவோ சம்மதித்த பின்னர் கல்யாணத்திற்கு ஏற்பாடாகி விடும். எளிய வகையிலேயே நடைபெறும்.

பாலி:—இது ஹிந்துக்கள் நிறையப் பெற்ற நாடு. இங்கு விவாகங்கள் பெண் வீட்டாராலும், பிள்ளை வீட்டாராலும் நிச்சயிக்கப்படுகின்றன. ஒரு பிராமணன் தாழ்ந்த குலப் பெண்ணை மணந்து கொள்ளலாம் ; ஆனால் ஒரு பிராமணப் பெண், பிராமணனல்லாதவனை மணக்கக் கூடாது. விவாக காலத்தில் மந்திரங்கள் ஓதுவதுண்டு. மந்திரங்கள் வட மொழியைச் சேர்ந்தவை. இம் மந்திரங்கள் அவர்களுடைய பாஷையிலேயே ஓலைகளில் எழுதப்பட்டிருக்கும். அவர்களது உச்சரிப்பு ஒரே தப்பாக இருக்கும். அவர்களுக்கு வட மொழி வார்த்தைகளில் ஒன்றினுக்காவது அர்த்தம் தெரியாது.

நம் நாட்டைப் போலவே அங்கு விதவைகள் மறு மணம் செய்து கொள்ள முடியாது. தற்பொழுது கூட விதவைகளில் அநேகர் மறு மணம்

(202-ம் பக்கம் பார்க்க.)

# திருக்கார்த்திகை தீபம்

(V. சங்கர ஐயர்.)

கைலாசத்தில் சிவபெருமான் பார்வதிதே[illegible]யோடு வீற்றிருக்கும் ஒருநாள் அங்கே எரிந்துகொண்[illegible] விளக் கொன்று அணைந்துபோகும் தருணத்தில், நெய்யை யுண்பதற்காக அவ் விளக்கில் வாய்வைத்த ஒரு எலியால் விளக்குத் திரி தூண்டப்பட்டு சுடர்விட் டெரிந்தது. அதன் பலனாக அந்த எலிக்கு சிவனுடைய அனுக்கிரகம் கிடைத்தது. மறு பிறப்பில் அந்த எலி மகாபலி சக்ரவர்த்தியாகப் பிறந்தது. சிவனுடைய ஆசீர்வாதத்தால் சகல ஐசுவரியங்களையும் பெற்று நன்கு ராஜ்ய பரிபாலனம் செய்து வந்தான். அந்த சக்ரவர்த்தி மகாபலி சகல ஆடம்பரங்களோடு சிவ தரிசனத்துக்காக தினமும் சிவாலயம் செல்லும் வழக்கமுண்டு. அப்படி செல்லுகையில் ஒருநாள் அந்த ஆலயத்திலுள்ள விளக்கு ஒன்றில் தன் ஆடைதட்டி கொஞ்சம் நெய் அவ் விளக்கினின்றும் அவன் உடலில் பட்டது. அந்த இடத்தில் ஓர் புண் உண்டாகி அச் சக்ரவர்த்தியை மிக வாட்டியது. அதற்காக பல அபிஷேகங்களும், பூஜைகளும் சிவபெருமானுக்குச் செய்து அத் தேவரை திருப்தி செய்யப் பாடுபட்டான்.

பரம கிருபாநிதியான சிவபெருமான் பார்வதி சமேதராக அவன் முன் தோன்றி புண் குணமாவதற்கு ஓர் உபாயம் கூறினார். அதாவது, "உனது அகங்காரத்தால் கோவிலுக்குள் அலக்ஷியமாய் சென்றதனால் உனக்கு இவ்வளவு துன்பம் உண்டாயிற்று. அதை யுணர்ந்து நீ பச்சாதாபப்பட்டபடியால் புண் சீக்கிரம் குணமாகிவிடும். ஆனால் நீ நம்மை உத்தேசித்து உன் ஆதீனத்தி லிருக்கும் ஒவ்வொரு க்ஷேத்திரத்திலும் இன்று முதல் நெய் விளக்கு ஏற்றி வரவேண்டும்." எனக் கூறி மறைந்தார். சக்ரவர்த்தியும் அவ்வாறே செய்து வந்தான்.

இப்படி யிருக்கையில், கார்த்திகை மாதம் கார்த்திகை நக்ஷத்திரமும் பௌர்ணமியும் கூடின தினத்தன்று பகவான் தேஜோ வடிவமாய் அவன் முன் தோன்றி அவனுக்கு சாயுஜ்ய மளித்தார். அப்பொழுது அவ்வாலயத்துக்கு வந்தவர்கள் யாவரும் அச்சோதியைக் கண்டு தோத்தரித்து வணங்கினார்கள். அச்சோதிக்குப் பொரி, அப்பம் முதலியன நிவேதனம் செய்தார்கள்.

இந்த ஐதீஹத்தை யுத்தேசித்தே கார்த்திகை தீபம் சகல ஆலயங்களிலும் நடத்தப்படுகிறது. யாவரும் கடவுளை ஜோதி வடிவமாக அன்று வணங்குகிறார்கள்.

கார்த்திகை தீப தரிசனம் திருவண்ணாமலையில் மிக விசேஷமாக நடத்தப்படுகிறது. அங்கேயுள்ள மலை யுச்சியில் பெரிய தேர் வடம் போலுள்ள திரிகள் போட்டு குடம் குடமாக நெய் யூற்றி எரிக்கப்படும் தீபத்தைக் காண வேண்டி திரள் திரளான ஜனங்கள் மனைவி மக்கள் நண்பர்களுடன் ஒவ்வொரு வருஷமும் செல்லுகிறார்கள்.

பூர்வத்தில் பிரம்மனும் விஷ்ணுவும் தனித் தனியே 'நான் பெரியவன்,' 'நான் பெரியவன்' என்று வாதிடத் தொடங்கினார்கள். அப்பொழுது சிவபெருமான் ஒரு ஜோதி வடிவமாக அங்கே தோன்றி இதன் அடி முடிகளைக் காண்போரே பெரியோர் எனக் கூற, இருவரில் விஷ்ணு கீழ் நோக்கி அடியைக் காணவும், பிரம்மன் மேல் நோக்கி முடியைக் காணவும் சென்றார்கள். வெகு பாடு பட்டும் இருவராலும் காண முடியவில்லை. அவர்கள் செருக்கும் ஒழிந்தது. உடனே அவர்கள் பணிந்து அச் சுடரைப் பிரார்த்தித்து அம் மலையிலேயே இருந்து ஜனங்களுக்கு அனுக்கிரகிக்க வேண்டுமென்று வினவினர். அங்கே அப்படியே சிவபெருமான் இருந்தனர். ஆனால் ஆண்டு தோறும் கார்த்திகை மாதத்துக் கார்த்திகை நக்ஷத்திரத் தன்று அம்மலை யுச்சியில் ஒரு ஜோதி காணப்படும் என்றும் கூறினார். கிருதயுகத்தில் அம்மலை யுசசி அக்னி மயமாகவும், திரேதா யுகத்தில் பொன்மயமாகவும், துவாபர யுகத்தில் செம்பு வடிவமாகவும், இக் கலி யுகத்தில் கல் வடிவமாகவும், இருப்பதாகப் புராணங்கள் கூறுகின்றன.

கடவுள் ஜோதிமயம் என்று வேதங்கள் வாதிக்கின்றன. அக்னியின் நாக்கு வழியாக நாம் கடவுளுக்கு நிவேதியம் செய்ய வேண்டுமென சாஸ்திரங்கள் கூறுகின்றன. ஹவிர்பாகங்களை நாம் அக்னியில் ஹோமம் செய்தால் அக்னி அந்தந்தத் தேவதைகளிடம் சேர்ப்பிக்கிறது என வேதங்கள் கூறுகின்றன. அதனால் அச் சுடரே முக்கியம். அதை வருஷத்தில் ஒருநாளாவது தியானித்து பூஜித்து சுக மடையவே இந்த திருக்கார்த்திகை ஏற்படுத்தப்பட் டிருக்கிறது. ஆகையால் அன்றைய தினம் யாவரும் கடவுளை ஜோதி வடிவமாக பிரார்த்தித்து சுக மடைவோமாக.

---

(200-ம் பக்கம் தொடர்ச்சி.)

செய்து கொள்வதில்லை. யாராகிலும் மறுமணம் செய்து கொண்டாலும் சமூகத்தில் எதிர்ப்பு ஒன்றும் எழுவதில்லை. பாலியில் உள்ள ஹிந்துக்கள் இவ்வளவு தாராளமான கொள்கை உடையவரா யிருக்கிறார்கள். நம் நாட்டில் அதுகூட இல்லை.

ஜப்பான்:—இங்கு நரகர்களால் நிச்சயிக்கப்பட்டு, பெற்றோர்களின் தீர்மானத்தைக் கொண்டு விவாகங்கள் நடந்து வருகின்றன. படித்தவர்களிடையில் அநேக யுவர்களும் யுவதிகளும் தமது மனைவிகளையும், கணவர்களையும் தாமே தேர்ந் தெடுத்துக் கொள்கின்றனர். மிகுந்த ஆடம்பரத்துடன் விவாகங்கள் நடத்தப் பெறுகின்றன

சைனு:—இங்கும் நரகர்கள் தான் தலையிட்டு வந்தனர். ஐரோப்பிய நாகரிகம் வந்த பின்னர் பழம் முறை மறைந்து கொண்டே வருகிறது. காதல் மணங்களுக்கும் குறைவில்லை என்னும்படியாக உளது.

மலேயா ஸ்டேட்ஸ்:—வெகுநாள் வரை விவாகங்க ளெல்லாம் பெற்றோர்களாலேயே நிச்சயம் செய்யப் பெற்று நடந்து வந்தன. ஐரோப்பிய நாகரிகம் பரவிய பின் பழைய முறைகள் எல்லாம் சிறிது சிறிதாகக் குறையலாயின. இப்பொழுது காதல் மணங்களே அதிகம்.

# வார்தா நினைவுகள்

("சமூகத்தொண்டன்.")

(சென்ற இதழின் தொடர்ச்சி.)

முஸ்லிம் ஆசிரியர் வார்த்தைப்படி மூன்றே மாதத்தில், சம்பந்தம் யாதுமில்லாத அரபி மொழியால் இவ்வளவு புலமை பெற்றிருந்தார் என்றால், வினோபாஜி ஓதாதுணரும் அறிஞர் என்பது உயர்வு நவிற்சி யாகாதன்றோ.

பிறகு, முஸ்லிம் ஆசிரியர் சென்றதும் வினோபாஜியைப் பார்த்து, "தாங்கள் இக்காலத்தில்—வயதில்—போய் ஓர் அயல் நாட்டு மொழி கற்பதின் கருத்துதான் யாதோ" வென்றேன். அவர் புன்னகையுடன் "ஆம், உமது கேள்விக்கு விடை கூறுவது அவசியம். நான் இஸ்லாமிய சமயவுண்மைகளையும் சமயத்தையும் தெள்ளத் தெளிய அறிய விழைகின்றேன். யான் இந்தியில் அதைப் படித்தேன். ஆனால், அந்தப் புனித குரானை அதன் மூதல் மொழியாகிய அரபி மொழியிலேயே பயில்வது இன்னும் இனிப்பாயிருக்கும்" என்று கூறினார். மற்ற மொழிகளில் குரான் கூட்டியும், குறைத்தும் எழுதியிருக்கும் போலும்?

இவ்வாறு வினோபாஜி இந்திய நாட்டின் முக்கிய மொழிகளுடன், அரபி மொழியும் பயின்றிருந்தும், தென்னிந்திய மொழிகளை—அதிலும் நமது "தமிழ் மொழி"யைக் கற்க முடியாதென்கிறார். "யான் ஆறே மாதத்தில் அதைக் கற்பிக்கக் கூடுமே"ன்று உறுதி கூறியும் வினோபாஜி அஞ்சினார். நமது தமிழ் மொழி கற்பதற்குக் கடினமாயிருக்குமென்பதற்கு ஓர் உதாரணமும் கூறிவிட்டார். அதாவது,

சில வாண்டுகட்கு முன், மலையாளக் கரையிலுள்ள குருவாயூர் கிருஷ்ணன் கோயிலில், தாழ்த்தப்பட்டோர் கோயில் தரிசனம் செய்யச் சத்தியாக்கிரஹம் நடந்த போது, தாம் பதினைந்து நாட்கள் அங்கு தங்கியிருந்ததாயும், அத்தனை நாட்களிலும் ஒரு மலையாள வார்த்தை கூடத் தம்மால் புரிந்து கொள்ளக்கூட வில்லையென்றும், தமிழ் மொழியும் அதன் அக்காள் தானே யென்றும் வினோபா கூறினார்.

## சோன் மாரி

வினோபாஜி எழுத்து வன்மை போன்று பேசுவதிலும் வல்லவர் எனச் சொல்லப்பட்டது. வார்தாவில், "வார்தா ஜில்லா காங்கரஸ் ஊழியர் பயிற்சி முகாமி"ன் ஆதரவில், காங்கரஸ் ஊழியர்கட்கு யோசனை கூறும்படி ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. ராஜேந்திர பிரசாத், காந்தியடிகள் ஆக வெல்லோரும் ஒவ்வொரு நாள் பேசினார்கள்; ஆனால் இறுதியில். வினோபாஜியும் ஒரு நாள் அழைக்கப்பட்டிருந்தார். அன்று மண்டபம் கொள்ளாக் கூட்டம். ஏன்? வினோபாஜி மகாராஷ்டிர மொழியில் பேசுவார் என்பதற்காகத் தான். யானும் சென்றிருந்தேன். வினோபாஜி உட்கார்ந்த வண்ணம் பேசினார். சுமார் இரண்டாயிரம் மக்களுக்கிடையில் மூன்று மணி நேரம் சொன் மாரி பொழிந்தார். இடை யிடையே

இடியும் மின்னலுங் கூட! மக்கள் அப்படித்தான் கை கொட்டிச் சிரித்த னர். ஆனல் அந்த மூன்று மணி நேரமும் ஒரே அமைதியுடன் இருந்த னர், மக்கள். மொழியறி வில்லாத நானே ஆச்சார்யஜியின் பேச்சுக்கும், முகத்தில் தோன்றிய வெறும் பாவத்திற்கும், சமிக்ஞைக்கும் கரத்துக் கிடக்தேனென்றால், சொல்லும், பொருளும் அறிந்து சுவைத்த மக்கள் மனே நிலை அவர் சொற்பொழிவு கேட்டு உவகை யடைந்ததில் வியப்பில்லை.

## உனக்கு என் பேச்சு புரிந்ததா?

மாலை 5 மணிக்கு சொற்பொழிவு முடிந்ததும் விநோபாஜி, தமது பவுனார் விடுதிக்குச் செல்ல மோட்டாரில் ஏறி அமர்ந்தார். மக்க ளெல் லோரும் விநோபாவை வழி யனுப்பக் காரைச் சூழ்ந்து கொண்டனர். கார் மெல்ல நகரத் தொடங்கிற்று. அப்போது தான் அவர் பார்வை என் மீது வீழ்ந்தது. "என்ன, நீருமா கூட்டத்திற்கு வந்திருந்தீர்?" என்று விநோபா சொன்னபோது, நகர்ந்த கார் நின்றது. நானும் காருக் கருகில் சென்றேன். "உமக்கு என் பேச்சு புரிந்திராதே." என்று சிரித்தார். "ஆமாம், பேச்சைச் சுவைக்கக் கூடவில்லை யானாலும், பேசும் போது இருந்த பாவத்தாலும், சமிக்கைகளாலும் தங்கள் பேச்சின் கருத்தை யொருவாறு உணர முடிந்தது" என்றேன். "ஆம், அது முடியலாம்" என்றார். வண்டியும் ஓடி மறைந்தது.

## கற்றாரைக் கற்றோரே காமுறுவர்

ஆச்சார்யா விநோபா விடம் காந்தி யடிகளுக்கு மகத்தான வாஞ்சை யும் மதிப்பும் உண்டென்பதை, எத்தனையோ முறை அடிகள் வாயினாலேயே கூறிய துண்டு. உப்பு சத்தியாக்ரஹம் செய்து, சிறை சென்ற தொண் டர்க ளெல்லாம் 1933 ஆம் ஆண்டு வெளிவந்த பின், வார்தாவில் கூடி யிருந்த எல்லாத் தொண்டர்களையும் பார்த்து காந்தி யடிகள் சொன்ன தாவது:—"நாமெல்லாம் வெற்றியுடன் வெளி வந்துள்ளோம். இவ் வெற் றிக்கு விநோபா போன்ற பெரியார்களின் நல் லெண்ணமே காரணமாகும். ஆகவே, இச்சமயம் அவரைத் தரிசித்து வாழ்த்து பெறுவது அவசியம். இதற்காக நாம் சபர்மதி செல்லவேண்டியது போக, அவரே அருள் கூர்ந்து இங்கு (வார்தா)-எழுந்தருளி யுள்ளார்." என்று கூறி அழைத்து தரிசனம் செய்து வைத்தார்.

காந்தி யடிகளைத் தரிசிக்க, இந்திய மாகாணங்களி லிருந்து மாத்திர மன்றி, உலகத்தின் பல நாட்டாரும் நாள் தோறும் சேவா கிராமம் யாத் திரை செய்கின்றார்கள். அவர்களில் சிலரைப் பார்த்து அடிகள் பின் வரு மாறு வினவுவ துண்டு. "நீங்கள் என்னைப் பார்க்கும் நிமித்தமாகவே தான் வந்தீர்களோ? அப்படியானல், விநோபாவையும் தரிசித்துப் போக வேண் டும்" என்பதே. பாருங்கள்! இதி லிருந்து காந்தி யடிகள் ஆச்சார்யா விநோபா விடம் எத்தகைய மதிப்பு வைத்திருக்கிறார் என்று தெரிகிற தல்லவா!

இங்கே விநோபாவின் வாழ்க்கை வரலாறு எத்தகைய தென்பது பற்றி விளக்குவது தகுதியாகும்.

## வினோபாவின் வாழ்க்கை வரலாறு

வினோபா மகாராஷ்டிர நாட்டின் ஒரு பகுதியான காந்தேஷத்தைச் சேர்ந்தவர். ஆனால் அவருடைய முன்னோர் பல வாண்டுகட்கு முன்னர் கூர்ஜர நாட்டிலுள்ள பரோடா சமஸ்தானத்தில் குடியேறினார்கள் என்று தெரிகிறது. அவர்கள் பிராமணர்கள். வினோபாவின் பெற்றோர் மகத்தான வாழ்க்கை லட்சியத்துடன் வந்தார்கள். பாரமார்த்திக வாழ்வுடன், பாரத நாட்டினிடம் நீங்காப் பற்றுகொண்டு இருந்து வந்தார்கள். இத்தகைய பெற்றோருக்கு முதல் மகனாய்ப் பிறந்தார், வினோபா. இவருக்குப் பின் பல மக்களைப் பெற்றார்க ளெனினும், இருவரைத் தவிர மற்றவர்களைப் பற்றிக் குறிப்பிடத் தக்கபடி யொன்று மில்லை.

வினோபா சிறு வயதிலேயே நன்கு படிக்கத் தொடங்கினார். பள்ளிக் கல்வியோடு, பாரமார்த்திகக் கல்வியும் தம் பெற்றோர் பால் பயின்று வந்தார். வயது ஏற ஏற வாழ்க்கையைப் பற்றிய விசாரம், தலைப்படலாயிற்று. மற்றப் பள்ளிக்கூடப் பையன்களைப் போலில்லாமல் வினோபாவுக்கு ஆன்ம விசாரம் தலைப்படலாயிற்று. அவர் தனியே யிருந்து தத்துவ விசாரணை செய்வார். சில சமயங்களில் தமது பள்ளித் தோழர்களிடம் இமயத்தைப் பற்றியும், அங்குள்ள யோகிகள், ஞானிகள் ஆகியோரைப் பற்றியும் சொல்லுவார். "அங்கெல்லாம் எப்போது செல்வேனோ?" என்று ஏங்குவார்.

வினோபா பரோடா கல்லூரியில் பி. ஏ. வகுப்பில் படித்துக் கொண்டிருந்தார். அப்போது அவருக்கு வயது 20 க்கு மேலிராது. ஒரு நாள் இரவு படுத்துக் கொண்டவர், காலையில் படுக்கை யறையில் காணப்படவில்லை. பெற்றோர் கொண்ட கவலைக்கு எல்லை யில்லை. அவர்கள் தேட வேண்டிய விடமெல்லாம் தேடி யாயிற்று; பயன் ஒன்றுமில்லை. ஆனால் மகனின் இயல்பை நன்கு அறிந்தவர்க ளாதலால், அவர் நல்ல வழி நாடியே சென்றிருப்பார் என்று நாளடைவில் மன மாறுவ தாயினர்.

வீட்டை விட்டு வெளியேறிய வினோபா பல சரித்திரப் புகழ் பெற்ற இடங்களையும், புண்ணியத் தலங்களையும் பார்த்துக் கொண்டு இமயம் நோக்கிப் போய்க் கொண் டிருந்தார். அப்போது அவருக்கு ஓர் அரிய சந்தர்ப்பம் வாய்த்தது. காந்தி யடிகள் தென்னாப்பிரிகாவில் ஒப்புயர் வில்லாத வெற்றி பெற்று, தமது தாய் நாடாகிய இப் புனித பாரத நாட்டிற்குத் திரும்பினார். அடிகளை அன்னை நாட்டு மக்க ளெல்லாம் குதூகலமாக வரவேற்றார்கள். தாம் சத்தியப் போரில் பெற்ற வெற்றியையும், அனுபவத்தையும் விளக்கும்படி அடிகளை, டெல்லியில் கேட்டுக் கொண்டார்கள். அடிகளும் அவ்வாறே ஒரு பிரசங்கம் புரிந்தார். அப் பிரசங்கத்தைக் கேட்கும் பேறு வினோபாவுக்கு வாய்த்தது. அதைக் கேட்ட பின் வினோபாவின் இட்டத்திலேயே மகத்தான மாறுதல் உண்டாயிற்று. காந்தி யடிகள் சொற் பொழிவி லிருந்து தாம் தேடித் திரிந்தவெல்லாம் கிடைக்கப் பெற்றதாய் அவர் கருதினார். ஆகவே, அவர் இமயம் செல்லும் எண்ணத்தை யெல்லாம் விட்டார். அடிகள் கொள்கையும் தமது கொள்கையும் பல வகையில் ஒன்றி யிருக்கக் கண்டு மகிழ்ந்தார், வினோபா.

## ஒளியோடு ஒளி

அதிலிருந்து விநோபா அடிக்கடி கடிதம் எழுதி தமது கருத்துக்களையும் சந்தேகங்களையும் காந்தியடிகளுக்குத் தெரிவித்து வரலானார். பிறகு, சபர்மதி ஆசிரமம் தோன்றிற்று. அதில் விநோபாவும் சேர்ந்து இருந்து வரலானார். ஆசிரமத்தில் காந்தியடிகள் வகுத்த பிரமச்சரியத் தேர்வில் வெற்றியோடு தேறியவர்களில் விநோபாவும் ஒருவர் என்பது அடிகள் கருத்தாகும். விநோபாவின் மற்று மிரு தம்பியர்களைப் பற்றியும் மேலே குறிப்பிட்டேன். அவர்களில் ஒருவர் சேவா கிராமத்திலே யுள்ளார். இன்னொருவர் விநோபாவின் கீதையை மகாராஷ்டிர நாட்டில் எல்லாம் விரிவுரை செய்துகொண்டு யாத்திரை செய்து வருகிறார். இந்த மூன்று உடன் பிறந்தாரும் மணம் செய்துகொள்ளவில்லை. நாட்டுப்பற்று அவர்களை விழுங்கியே விட்டது.

பெற்றோர் பெற்ற பெரும்பேற்றைப் பெற்றவர்கள், விநோபாவின் பெற்றோர்கள்.

> "பெறுமவற்றுள் யாமறிவதில்லை அறிவு அறிந்த
> மக்கட்பேறு அல்ல பிற"

என்ற தமிழ் மறையின் கருத்தை முற்றுவித்தனர் விநோபாவின் பெற்றோர்.

ஆச்சார்யாவின் கருத்துப்படி, நான் அவரிடம் விடை பெற்றுக் கொண்டு நால்வாடி ஆசிரமம் போகலானேன்.

## நால்வாடி ஆசிரமம்

மாலை ஆறரை மணி. பஸ்ஸை விட்டிறங்கினேன். இருள் கவிந்து கொண்டிருந்தது. ஆசிரமத்துச் சிறு சிறு கட்டிடங்களும், "எல்லோரும் ஓரினம், எல்லோரும் ஓர் குலம்" என்னும் தத்துவத்தைக் குறித்து பறந்து கொண் டிருந்த மூவர்ணக் கொடியும் புலனாயிற்று. நான் என் சாமான்களுடன் ஆசிரமத்தின் முக்கிய வாயிலின் வழியாய் உட்சென்றேன். அப்போது அங்கு, ஓடு போட்டிருந்த ஆசிரமக்குடிலில் விளக்கு மினுக்கிற்று. அக்குடிலுக்குள் செல்ல வெண்ணி தயக்கத்துடன் உள்ளே நுழைந்தேன். அப்போது ஒருவர் எதிரே வந்து, "வாருங்கள், யாரை வேண்டும் தங்களுக்கு" என்று மரியாதையான, தோரணையில் கேட்டார்.

அவர் இளமையும் திரண்ட அழகும் வாய்ந்தவராய்க் காணப்பட்டார். அவருடைய வயது இருபத்தைந்துக்கு மேலிராது. அவர் தலையில் ஒழுங்கற்ற முறையில் தலைமயிரை அடியுடன் வெட்டிவிட்டுக் கொண்டிருந்தார். முகச்சவரம் செய்து கொள்ளாமல் முகவாய்க்கட்டையில் சிறுமயிர்கள் வளர்ந்து விகாரமாய்க் காணப்பட்டது. அவர் ஓர் வெண்ணிறக் கதருடையை இடுப்பில் சுற்றி யிருந்தார். ஓர் அரைக்கைச் சட்டையும் அவர் உடம்பை மூடிக்கொண்டிருந்தது. அவரைக் கண்டவர்கள் அவரை ஒரு வேலைக்காரன் என்று கூறத் துணியமாட்டார்கள். ஆயினும், வெளியுலக மயக்கத்தில் இருந்து ஆசிரமத்தில் நுழைந்த எனக்கு, அவர் ஒரு பணியாளன் என்று துணியச் செய்தது.

அவர் கேள்விக்கு விடையாக, "நான் ஆசிரமம் பார்க்க வந்தேன்; ஆகவே, எனக்கு ஒருவரும் தேவையில்லை" என்று கூறினேன்.

"தாங்கள் சென்னை மாகாணத்தவர் போலும். இங்கேயும், ஆசிரமத்தில் உங்கள் மாகாணத்தைச் சேர்ந்தவர் இருக்கிறார்," என்று (இவ்வளவும் இந்தியில் தான் நடந்தது) அவரை அழைத்து வருவதாய்ப் போய் திரும்பி வந்தார். அவரைத் தொடர்ந்து மற்றொருவரும் வந்தார். அவரும் முத லில் சந்தித்தவரைப்போலவே உருவத்திலும், உடையிலும் ஒத்திருந்தார். ஆனால், நிறம் மட்டும் கொஞ்சம் குறைவாயிருந்தது. இருவர் தோற்றத்தி லும் கண்ட வொற்றுமையால், "இவர்களிருவரும் சிறைக் கோட்டத்தி லுள்ளவர்களோ" வென்று மயங்கலானேன். அப்போது, முதலாமவர், பின்னே வந்தவரைச் சுட்டி, "இவரும் உமது ஊரார்தான். நீங்கள் இரு வரும் பேசுங்கள்" என்று அறிமுகம் செய்தார். நானும், அவருக்குக் கைகுவித்து வணக்கம் கூறினேன். அவர் "நமஸ்தே" என்று சொல்லி "உமக்குத் தமிழ் தெரியுமென்றே நினைக்கிறேன்" என்று மலையாள நாட் டார் தமிழ் பேசும் தோரணையில் கேட்டார். நான் "ஆம்" என்று என்னைப் பற்றிய விவரம் அனைத்தையும் விளக்கினேன்.

அதன்பின் அவர், "தாம் திருவிதாங்கூர் சமஸ்தானத்தைச் சேர்ந்தவ ரென்றும், தம் பேர் சத்திய வரதன் என்றும், சென்ற உப்பு சத்தியாக்ரகத் தின்போது பள்ளிவிட்டு வெளியேறியதாயும், மனம் சென்றபடி திரிந்து, முடிவில் சபர்மதி யடைந்ததாயும், அதிலிருந்து ஆசிரமவாழ்வே பிடித்து விட்டதாயும் தெரிவித்தார்.

நால்வாடி ஆசிரமத்தை யடைந்தபின் நாளடைவில் திரு. சத்தியவரத னின் சிறப்பு தெரியவந்தது. அவர் எப்போதும் எதையாவது செய்து கொண்டே யிருப்பார். சும்மா யிருக்க அவரால் முடியாது. அவர், பெட்டியில் அடங்கும் ராட்டை ஒன்றைக் கண்டார். அதற்குச் "சத்தியன் சர்க்கா" வென்று கூறப்படுகிறது. இந்தியில் நல்ல பயிற்சி பெற்றிருக் கிறார். "தக்ளி நூற்பது எப்படி" என்று சிறு இந்தி புத்தகத்திற்கு ஆசி ரியருமாவார். அவர், சத்தியவரதன் ஒரு சாதாரண அரிக்கன் விளக்கில் சில மாறுதல் செய்து கடலெண்ணெய் விட்டு எரித்தார். அதில் நல்ல வெளிச் சம் காணவே, அதை, சேவாகிராம இரு இஞ்ஜினீர் (Engineers) களுக்குக் காட்டினார். அவர்கள் அவரது முயற்சியை மெச்சினார்கள். பிறகு, அவர், அவ்விளக்கை ரூபாய் 200-க்கு மகன்வாடிக்கே கொடுத்து விட்டார். சர்க் காவிலும், தக்ளியிலும் அதிகப்படி நூல் நூற்கும் ஆற்றல் வாய்ந்தவர். மகன்வாடி தொழிற்சாலையில் நூற்கும் பயிற்சிக்கு ஆசிரியரா யிருந்தார்.

சத்தியவரதன், என்னை முதலில் சந்தித்தவரைப்பற்றியும் விளக்கினார். "அந்த முதலாமவர் காந்தேஷத்தைச் சேர்ந்த ஓர் உயர்குடி பிராமணர். இஞ்ஜினீரிங்-Engineering கல்லூரில் B, E. பரிட்சைக்குப் படித்திருந்தா ரென்றும், பின்னர் கல்லூரியைவிட்டு இயக்கத்தில் சேர்ந்து விட்டா ரெ"ன்றும் விளக்கினார்.

"அப்படியானால் இங்குள்ளோர்களை--ஆசிரமவாசிகளை-உடை முத லானவற்றைக் கொண்டு தீர்மானிப்பது என்னையே, யான் ஏமாற்றிக் கொள்வதாகும் போலும்" என்றேன். அவரும் என் கருத்தை யாமோ தித்தா ரென்பதை, அவர் முகத்தில் மலர்ந்த முறுவல் காட்டியது.

நால்வாடி ஆசிரமம் மிகத் தலைசிறந்த ஒழுக்க முறைகளை வகுத்துக் கொண்டு மிளிர்கின்றது. அதில் வதிபவர்களெல்லாம் குருகுல வாழ்வின்

கொள்கைகளில் அழுந்தி ஒழுகுபவர்கள். இதை, யான் ஆசிரமத்தில் சேர்ந்த சில நாட்களிலேயே காண நேர்ந்தபோது என்னுள்ளம் மட்டற்ற மகிழ்ச்சி யடைந்தது. யான் ஆசிரமத்தில் சேர்ந்ததானது என் வாழ்விலே எதிர்பாராது வாய்த்த ஓர் மகத்தான நிகழ்ச்சி யென்பதை யான், என் வாழ்நாளிலே மறக்கவே முடியாது.

## நால்வாடி ஆசிரமமும் குறிக்கோளும்

நால்வாடி ஆசிரமம், வார்தா—நாகபுரிப் பாதையில், வார்தாவிற்கு ஒன்றரைக்கல் தொலைவில், பாதையருகே அமைக்கப்பட்டுளது. ஆசிரமம் பரந்த புன்செய் நிலப்பரப்பில் சிறந்த சுகாதார வசதிகளுடன் அமைக்கப்பட்டுளது. இவ்வாசிரமத்தைச் சேர்ந்த மிகச் சிறு கட்டிடங்கள் சுமார் இருபதுக்குக் குறையாது. இக் குடில்களை மூன்று வரிசையில் அமைத்துள்ளார்கள். ஒவ்வோர் கொட்டகைக்கும் இடையே சுமார் 40 அடி தூரம் இடை வெளி விட்டு அமைத்திருக்கிறார்கள். குடில்களெல்லாம் நாட்டு ஓடுகளால் மூடப்பட்டிருப்பினும்; மூங்கில் பிளாசுகளால் பின்னி மேலே மண்பூசிய சுவர்களாகவே யுள்ளன. தரைகளெல்லாம் மண்ணினால் ஆனவை. ஆசிரமம் கரிசல் நிலத்தில் அமைந்திருப்பதால், மாரி காலத்தில் காலில் மண் ஒட்டாதபடி பருக்கை மண் பரப்பப்பட்டுள்ளது. ஆசிரம நிலப்பரப்பில், மழை நீர் வடிந்துபோக நல்ல வடிகால் வசதியும் அமைக்கப்பட்டிருக்கிறது. ஆசிரமத்திற்கு வேண்டிய குடி நீர் வசதிக்காக ஒரு பெரிய கிணறும் மூழ்கி இராட்டினமும் அமைத்திருக்கிறார்கள். இவை போக ஆசிரமக் காரியாலயம், மடப்பள்ளி, நூற்றல், சாயம் போடல், செசவு ஆகிய தொழில்களுக்கான கட்டிடங்கள் நல்ல கெட்டிக் கட்டிடங்களாகவே அமைத்துள்ளன. தம்பதிகளாகவுள்ள ஆசிரம வாசிகளுக்கென்று முழுதும் தனியான விடத்தில் விடுதிகள் கட்டப்பட்டுள்ளன. (தொடரும்.)

---

(198-ம் பக்கத் தொடர்ச்சி.)

றிய அதிக நினைவு. கோழை மனமுடையவர்களுக்கு இக் கனவு அதிக பீதியைச் சில சமயங்களில் உண்டாக்கி விடும். அன்றியும், அதிக உணவாலும், அஜீரணத்தாலும், தலைவலியாலும், உடல் மெலிவாலும் இக் கனவு காண நேரிடலாம். நல்ல தூக்கம் இல்லாத சமயத்தில் இது, அதிகம் நம்மை அரித்துத் தின்றுவிடும். தூக்கம் நன்றாக வரவேண்டுமானால் சூது வாது இல்லாமல் நன்றாக பகலில் உழைக்கவேண்டும். வேலைக் களத்தில் தப்புபவர்கள் இத்தக் கனவுத் துன்பக்களத்தில் தப்ப முடியாது.

பயனுறு கனவே தெய்வீக வாசனை நிரம்பியது. அது, நல் வாழ்க்கையின் எதிர்கால வழியை நன்கு திறந்து காட்டுவது. இக்கனவுக் காரணம் விதிதான்! அதாவது நாம் செய்யும்—செய்த நல்லவையுந் தீயவையுந்தான்!

நாம் செய்த பாபங்களுக்காக வருந் தெய்வத் தண்டனைகளையும், நாம் செய்த புண்ணியங்களுக்காக வரும் நல்வரவுகளையும் ஒருநாள் முன்னே ஒரு வாரம் முன்னே, ஒரு மாதம், மூன்று மாதம், ஆறுமாதம், ஒன்பது மாதம், ஒரு வருஷம் முன்னே தெரிவிப்பது பயனுறு கனவுதான். இக் கனவை, நம் உயிருக்கு உயிராயிருக்கும் ஒன்றனுடைய செயல் என வேண்டும். அதற்குத்தானே எதிர்கால நிகழ்ச்சிகள் தெரியக் கூடும்?

# திருத்தம் செய்வார்க்கு

(M. A. தேவராஜன்)

"........கற்றோன்றி மண்டோன்றாக் காலத்தின் முன் றோன்றி மூத்த குடி வாழ்வினால் மொய்ம்புகழ் உடையவர் முத்தமிழ் மக்கள். படைப்புக் காலந் தொட்டு உடைப் பெருஞ் செல்வராய்ச் சீருஞ் சிறப்பும் ஆரத் திக்கெட்டினும் புகழ் மிக்க செங்கோல் ஓச்சி மூவேந்தரின் காலத்தின் முன்னமே தமிழரிடம் இலக்கண இலக்கியம் நிரம்பிய நூல் பல நிறைந் திருந்தன. இயற்கையின் நுட்பமும், திட்பமும், மற்றதன் இயல்பும் இயற்கையோ டினிதுறைந்து வாழ்ந்து, அங்கை செல்வி என எங்குங் கண்ட தமிழர், அவ் வரும் பெறல் உண்மைகளைத் தம் பேரறிவினால் உணர்ந்து, "யாம் பெற்ற பேறு பெறுக இவ் வையகம்" என உலகிற்கு, நூல் வடிவில் இலக்கியங்களாக இனிது யாத்தளித்தனர். இவ்வா றியாத்த இலக்கியங்கட்கோர் செவ்வாற்றில் என்றும், யாண்டும், நின்று நிலவுமாறு, மொழி நூல் மிக வல்ல அறிவில் அகத்தியரும், ஒல்காப் புகழ்பெருந் தொல்காப்பியரும், இருபேர் இலக்கணம் இனிதுதவிப் போந்தனர் என்ப. வசைதீர நன்றாய்ந்து இசைபெறும் இனிய தமிழிலக்கணம். பின்னர்ப் பெரிதுந் திரியாத வண்ணம் முன்னோர் அதனை முடிந்த முடிபாய் யாத்துச் சென்றனர் என்க. எனவே, பின்னர்ப் போந்த பேரறிஞர்களும், பன்மொழிக் கடல் மூழ்கிய பவணந்தி போன்றாரும் பின் மொழிந்த தம் எளிய இனிய இலக்கணத்தும், பெரிதும் "முன்னோர் நூலின் முடிபொருங் கொத்துப் பின்னோன் வேண்டு சில விகற்பமும் கிளந்து அழியா மரபின் வழிநூல்" அளித்தனர். இக் கூறிய முடிபனைத்தும் யாண்டும், எவரும் ஒப்ப முடிந்த உண்மைகளாகும்.

ஆயின், இக்கான் "......இலக்கண நூல் புதிதாக இயற்றுதலும் வேண்டும்" எனப் புதுவை. புதுமைக் கவியரசர் பாரதிதாசனார் போன்றோர் சீர்திருத்தம் விழைவானேன்? எனலாம் அன்றே? நன்று; பாரதியார், பாரதிதாசனார் போன்ற இக்காலக் கவியரசர் இனி வேண்டும் இலக்கணம், முதுவிலக்கணம் தம்மை முற்றும் ஒழித்துப் புதியதாய்ச் செய்யுமோர் இலக்கணம் அன்று காண். என்னை? பழந்தமிழ் இலக்கணம் பரண்மேற் றூங்க, கொழுந்தமிழ்ச் சுவைகெடக் கொழித்த புராண இடை—நூற்றாண்டில், பிறநாட் டிலக்கணத்தைப் பெரிதும் தழுவி நம் தமிழ் இலக்கணத்துள் ஜாதி கற்பித்தும், பிறர் அறியாவாறு தமிழர்க்கு முற்றிலும் முரணான பாட்டணி யியலும், பிறவும் நீட்டி, "ஒருத்தர் தலை இல்லாமல் ஊர் அறிந்த" தமிழுக்குப் பதிலாக, கற்று வல்ல கவிஞரும் தெற்றென உணராது திண்டாடும்விதமாய் கட்டிய போலி யிலக்கணமே சாலவும் நீக்கிப் பழந் தமிழ்ப் புதுநெறி யிலக்கணம் வேண்டி நிற்பவர் அவர் ஆகலான் என்க.

எனவே, இக்காலத்தில், ஏறத் தாழ மூவாயிரம் ஆண்டிற்கு முன்னமே முற்றுப்பெற்ற தமிழ் இலக்கணத்தை முதல்வன் போலத் திருத்த முற்படுவது முற்றும் வியப்பிற் குரியதொரு பிள்ளை விளையாட்டேயாம்.

இஃது இங்ஙனமாக, நம் மினிய "ஆனந்தபோதினி"யில் சில திங்களாக, "எது தமிழ்த் தொண்டு?" என்பது குறித்து, ஒரு சிலர், வெவ்

வேறு கருத்துட்கொண்டு எழுதி வந்தமை நம் அன்பர்கள் அறிந்த ஒன்றாம். அஃதாவதிது : நம் மதிப்பிற்கு உரியவரும், அறிஞரும் ஆகிய உயர் திரு. T. K. சிதம்பரநாத முதலியாரவர்கள் தாம் புதிதாக ஒருண்மை கண்டு பிடித்து விட்டதாய் மனப்பாற் குடித்துக்கொண்டு, "கல்கி" எனும் ஒரு வெளியீட்டில் எழுதி வரும் இலக்கணத்திற்கு முற்றிலும் மாறுபட்ட ஒரு (தமிழ்) நடையைத் தகைத்து S. நாராயணனார் மறுத்தெழுதலும், சீறிச் சினந்து, அவரொடு மாறுகொண்டு, மறுப்புக்கு மறுப்பாய்ப் பொறுப் பில்லாமல், "இதுதான் தமிழ்த் தொண்டு!" என இரகுநாதனார் கழறி யதும், அதற்குத் தகுதியான செவ்வன் இறையாக, S. பழனியப்பனார் தடை விடைகளான் ஆன்றோர் சென்ற சான்றநெறி யுண்மை காட்டி அறைந்ததும், அதற்குப் பின் இரு திங்களாய்ச் சொற்போர் ஓய்ந்திருப்ப தும் அன்பர்கள் அறிந்ததே.

இவ்வ யெல்லாங் கூர்ந்து நோக்கிய அறிஞர்கள் உண்மை எது? என்று திண்ணமாய் உணர்ந்திருப்பர். எனினும், இப்போரின் முடிபு தாம் யாதென நம் இதழாசிரியரும், T. K. சியும் ஒன்றும் உரையாது நின்றமையின், எம் போன்றோர் உள்ளத் தெழுந்த ஐயம் நீங்கிற்றில்லை. எனவே உண்மைநாடி T. K. சி. முதலியார் தமக்கே இதனை, உண்மை தெரிக்குமாறு விண்ணப்பமாய்ச் சமர்ப்பிக்கின்றேன். என்னை? T. K. சி. முதலியார், குற்றங் களையும் பெற்றியும், வழூஉக்களைத் திருத்தம் செய்யும் குழூஉக்களின் றலையானவர் என்றும் "குரு" என்பார் "நிழ லருமை வெய்யிலிலே" என்ற கட்டுரையில் எடுத்துக் காட்டினமூலம் இனிது அறிவித்தமையின் திருத்தம் செய்வார்க்கு இச் சிறு விண்ணப்பம் செய்கின் றேன். இடையே என் எண்ணமும் எழுத நினைக்கின்றேன். வல்லுநர் உண்மையைச் சொல்லுவார்களாக! இனி, சற்றே இரகுநாதனாரின் வாதங்களை ஆராய்வாம்.

T. K. சி. முதலியார், வகார, லகாரங்கட்கு முன்னால், வரும் வல்லினம் மிகும் என்ற "* புத்துண்மைப் போலிவிதி"யினால்

(1) நற்றாமரை எனற்பாலதை, நல்த் தாமரை என்றும,<br>
    முட்டாமரை ,, முள்த்தாமரை ,,<br>
(2) நூற்கடல் ,, நூல்க்கடல் ,,<br>
    கட்குடம் ,, கள்க்குடம் ,,<br>
(3) மற்போர் ,, மல்ப்போர் ,,<br>
    எட்புனல் ,, எள்ப்புனல் ,,<br>
(4) விற்சமர் ,, வில்ச்சமர் ,,<br>
    முட்செடி ,, முள்ச்செடி ,,

---

* புத்துண்மைப் போலி: உண்மையே போல் ஏமாந்த மாந்தரை மயக்குவது. எடுத்துக் காட்டு :—ஐ = அய்; ஔ = அவ்; எனவும், ஐ = அஇ; ஔ = அஉ; எனவும், ஒலியினால் ஒன்றுபட்டு மயக்கம் தருவது. இதனை நன்றுணரார், எழுதுங் காலையும் அவ்வை, அவுஅஇ; கலை; கலய்இ என்றெலாம் மயங்கி எழுதுவர். இவை முறையன்று. முறை யென்போர் பெரியார் ஈ. வே. ரா. வின் வரி வடிவ ஆய்வினை எதிர்ப்பது அறிவின்மையாம். இலக்கண விளக்கத்தில் இப்போலியை விரிவாய்க் காண்க.

எழுதும் பான்மையிற் புகழ்க் கம்பன் இராம காதையைத் திருத்துவா ராயினார். இதற்கு இவர் எங்குக் கண்டாரோ புது அல்லது முது விதி? ஒருகால், "யரழ முன்னர் கசதப" என வரூஉம் விதியைக் கண்டு, இடையின எழுத்தாறனுள், யரழ எனும் மூன்றனுக்கும் பொருந்தும் விதியை ஒரே இனமான ல, ள, வுக்கும் பொருத்தினாரோ? அற்றேல், அப் பொருத்தம் வகரத்திற்கு வாரா தொழியு மன்றே? எனவே இம்முறை சரி யன்று. மற்றொருகால், படித்தறியாத பாமரமக்கள் பலரும் இவ்விதமே மயங்கி எழுதுவதனால், பெரும்பான்மை நோக்கி இதனை "உலகத்தோ டொட்ட ஒழுகி"த் தம்மைக் கற்றவராகவே எவரும் கருதும்படிச் செய்யத் தலைப் பட்டனரோ அறியேன். எப்படியாயினும், ஒரு புதுமுறையை உலக நடையிற் கொணரத் துணிந்த இவர், முன்னரே, தமிழ்க்கு வேந்தர்களா யின்று மிளிரும் மறைமலையடிகள், பண்டிதமணி, நா. மு. வே. நாட்டார் சோம சுந்தர பாரதியார் ஆகியோர் தம் முன் உசாவி ஒரு முடிபுக்கு வந்திருத் தல் வேண்டும். இன்றேல், உலகப் பொது அறிஞர் ஆதரவு பெறவாவது எல்லா வெளியீட்டிலும் ஓர் அறிக்கை விட்டிருத்தல் வேண்டும். ஆனால், இவர் மேற்குறித்த நேரிய வழியை நினையாது, அண்மையில் தோன்றிய தம் நண்பரின் 'கல்கி' வெளியீட்டில் எழுதத் துணிந்தது நன்றென நவிலேன். இதனால், "பொய்படும் ஒன்றோ—" என வரூஉம் குறட்கு இன்று இலக்கியம் கண்டேன் என்றனர் S. நாராயணனார். இதனை நோக்குங்கால், "சந்தைக் கடைகளிலும், நாற் சந்தி தெருக்களிலும், எது கலகலெனச் செல்லுபடியாகிறதோ அதுவே தமிழ்" என்றும், "போஜனம் ஆயிற்றா?" என்பதும் 100-க்கு 75-விழுக்காடு வடசொல் லைக் கலந்து மணிப்பிரவாள நடையிற் பேசுவதும், 'சோறு தின்றாயா' என்பதும் 'தமிழ்மரபு' என்றும் உண்மை யறிந்து வைத்தும் அஞ்சாது நெஞ்சழுத்தங் கொண்டு, "விளக்கற்றம் பார்க்கும் இருளேபோல், தமிழர் ஏமாறுங் காலம் என்று? என்று வஞ்சகமா யெதிர்நோக்கிக் காலங் கிடைக்கும்போது சிறுகச் சிறுகத் தமிழ்க் கொலை செய்யும் இக்காலத் தமிழ்ப் பெருமக்கட்கும் இவர்க்கும் வேறுபாடில்லை என்றே துணிகின்றேன்!

நிற்க. முதலியார் அவர்கட்குத் துணையாக வந்த இரகுநாதனார், முற்றும் கட்சி வேற்றுமைக் கருத்துட்கொண்டே வாதிக்க முற்பட்டார் என்பேன். ஏனெனிற் கூறுவேன்:

தொல்காப்பியத்திலும், நன்னூலிலும், இலக்கண விளக்கத்திலும், "ல, ள, வேற்றுமையில் ற, டவும், அல்வழி அவற்றோடு உறழ்வும், வலி வரின் ஆம்" என்றும், "ன, ல, முன் ற, ன வும், ண, ள முன் ட, ண வும் ஆகும். த, நக்கள் ஆயுங்காலே" என்றுமே முடிபொருங்கு ஒத்து உரையா நிற்கவும், ஒல்காப் புகழ்பெறு தொல்காப்பியர் முதல்—என்? குமரம் உண்டாய கால முதல்—இன்று சிறு பள்ளியில் சென்று பயில் தமிழ் மாணவர் வரைக்கும் யாவரும் இம்முறை யுண்மையாய் ஏற்றுக்கொண்டு போற்றதக்கதென றுட்கொண்டு பயிலாநிற்கவும், இவற்றையும் நோக்காது "முன்னோர் மொழி பொருளேயன்றி யவர் மொழியும் பொன்னே போல் போற்றாது; ஒலி, மொழி, தமிழ் இலக்கணமும், அவற்றியல்பும் உணரா தார் போன்று எழுதி யதனைத் தகுதியுடையதெனக் கூற முன் வந்ததும், அன்றி, தக்க சான் றென்றும்,—"ஆட்சியில், ஆவணத்தில், அன்றி

மற் றயலார் தங்கட் காட்சியில்" ஒன்றும் காட்டாது, பொது விதியும், சிறப்பு விதியும் பொலிந்து கிடக்கவும் அவற்றைக் கொள்ளாது, இயல், அதிகாரம் என்பனவற்றின் புற நடைகளையும் ஏற்காமற் றள்ளிவிட்டு, எல்லா நூற்கும் ஏற்குமா றமைத்த நூற் புறநடை விதியை புணரியலுக்கு ஏற்புடைத்தாக் கொண்டு, வேறுவழி யின்மையின் குருடனுக் கோர் கோல் கிடைத்தால் எனக் கிடைத்த அவ் விதியைப் போற்றுகின்றனர். எனவே, இவர் கூற்று, வேறு எதிர்ப்பார் இலானும் தானே வீழ்ந்த துணர்க.

அன்றியும், இவர் கூறிய புற நடையையே, வழுக்கி வீழுந்தொறும் கொண்டமைவோமாயின், தமிழ், தமிழர், தமிழ் நாடு எவ்வா றிழிவுறும் என்று யான் இனியும் இயம்ப வேண்டுமோ? மற்றும், அப் புறநடை தானும், ஈண்டுத் தவறுடைத்து அவர் காட்டிய நெறியில் என்க. என்னை? பொதுவியற் புற நடை விதியாகிய,

> "எப்பொருள் எச்சொலின் எவ்வாறு உயர்ந்தோர்
> செப்பினர் அவ்வாறு செப்புதல் மரபு"

விதியால், மரபுக்கு மாறுகப் புணர்வது மரபு வழுவாம் என்று மறுக்க இவர் வாதம் இடந் தந்தமையின் என்க.

மேலும், "பழையன கழிதலும், புதியன புகுதலும் வழுவல கால வகையினானே" என்றே புறநடை யோதினர்; ஆதலின், பழைய முறை தாம், தாமே வழக்கு மிகுதியின்மையின் அருகிக் கழிய, அவ்விடத்தே கால வேறுபாட்டால் புதிய முறையும் வழக்கு மிகுதியினால் புகுதலே வழுவல என்றனரன்றிப் பழையன கழித்தலும், புதியன புகுத்தலும் வழுவல என்றோதினாரில்லை. மற்று, அவ்வாறு செய்வாற்றுக் கெதிரிடையாக, பழையன கழித்தும், புதியன புகுத்தியும் எழுதியும் பேசியும் வருவது ஒரு பெரும் பிழையென உய்த்துணர வைத்தார். தன்வினை வாய்பாடு தந்தமையால் என்க. எனவே, இரகுநாதனார் காட்டிய விதி ஈண்டுப் பொருத்த மின்றி வெற்றெனத் தொடுத்த குற்றமாயிற்றென ஒதுக்குக.

மற்றும், இவர் "ஓதி யுணர்ந்தும், பிறர்க் குரைத்தும் தாமடங்கா"து, இவர் தம் இலக்கணாசிரியர் ஆகிய T. K. சி. ஐப் போல, வேண்டுழிமட்டும் திருத்தியும் வேண்டாவிடத்து ஒதுக்கியும் எழுதவும் பழகாமல், தாம் நிலை நாட்ட வந்த விதியைத் தம் கட்டுரையிலும் எடுத்தாண்டு நம்மனோர்க்கு வழி காட்டவும் இல்லை. என்னை? அஃ தவர்க்கு இதுவரையும் பழக்கம் இன்மையின் என்க. எனவே, தாம் கூறிய விதியே தாம் பயிலாமை, இவர் கூற்று, குற்றமுடைத்தெனத் தெற்றென விளக்கி, இவர் உரை வாய்ச் சொல்லில் வீரர் உரையாகவே நின்று பயனின்றிக் கழிந்தது என்று மறுத்திடுக.

மேலும், எழுத்துக்களைப் புணர்ச்சிவழிக் கூட்டி எழுதினால், பொருண் மயக்கம் உண்டாகிறது என, ஒரு எடுத்துக் காட்டால் விளக்கினர். உண்மை.

ஆங்கிலத்தில், உச்சரிப்பிலும், எழுத்து கூட்டுவதிலும், சிறு பிழை நேரினும், இலக்கணத்தில்,

He writes என்பதை He write என்றும்,
They are writing என்பதை They is writing என்றும்,

You are writing என்பதை | You is writing என்றும்,
I am writing என்பதை I is (are) writing என்றும்

மறந் தெழுதினும், எழுதினேன் இளைஞாய் இருப்பினும் அவனை வெகுளிச் சிரிப்பினொடு எள்ளி நகையாடும் மானமிலாத் தமிழறிஞர் ஒரு சிலர், தம் தாய் மொழியாம் தமிழிலக்கணத்தை—இயற்கையொடு பொருந்திய இலக்கணத்தை—ஒரு சிறிதும் அறியாது, தமிழ் நூல்களை மதியாது தருக்குடன் அவற்றைப் படித்தால் பொருள் விளங்காது எனப் பொய்யுரைப்பதும், இலக்கணம் என்றால் இருகாதம் பறப்பதும், தமிழாசிரியரைக் கண்டால் "நையாண்டி" செய்வதும், ஆக இருந்தால் அது யாருடைய குற்றம்? "அறுசுவை யுண்டி யமர்ந் தில்லா ளூட்ட மறுசிகை நீக்கி யுண்ண"த் தரும் பெருஞ்செல்வன், தன் வாழ்க்கை யின்பத் துன்பங்களைச் சமமாய்ப் பங்கிட்டுத் துய்த்துத் துணை செய்யக் காத்திருக்கும் கற்பின் நல்லாளைக் கண்ணெடுத்துப் பாராது, வேசையர் ஆசையால் வீழ்ச்சியுற்றுப் பின் அலமரும் வீணன் போலவும், வாலுகம் கிடந்த பூஞ்சோலை கிடப்பவும், வெம்பாலையிற் சென்று ஓலம் இடும் அறிவிலான் போலவும், தமிழினை நன்கு கல்லாது கட்டிய வீட்டுக்கு எட்டுக் குற்றம் கூறி வருபவர் அறிஞர் ஆவரோ? எனவே, இவர் வாதம் தர்க்க முறைப்படி யில்லையென் றொழித்துச் செல்க.

மேலும், முட்டாட் டாமரை என்றால், பொருள் தெரியவில்லை எனின் மூன் தாமரை என்று இயல்பாக மொழிவதே முறையாகும். அங்ஙனமின்றி, மூன்த் தாமரை எனல் எங்ஙனம் பொருந்தும்? புணர்ச்சி விதியாற் பொருள் விளங்கவில்லையென்று கூறுபவர், மீண்டும் தாம் ஒரு புணர்ச்சிவிதி கூறுவது "குருடும் குருடும் குருட்டாட் டமாடிக் குருடும் குருடும் குழிவிழி மாறே" ஒக்கும் என்பேன்.

அன்றியும் T. K. சி. சொல்வதை அப்படியே ஒப்புக்கொண்டால், பெரியார் தமிழ் வரி வடிவ ஆராய்ச்சி முடிபுகளையும் ஏற்கத்தான் வேண்டும். ஆனால், ஈ. வே. ரா. ஆராய்ச்சியால் ஒரு சில நன்மைகள் எய்தும் நிலை இருந்தும், அன்று அவரைக் கண்டித்தவர் எத்துணைப் பேர்? இன்றும், அவர் காட்டிய வழியை, க. ம. தமிழர்த் தவிர்த்து வேறியார் பின்பற்றுகின்றனர்? அவ்வாறிருக்க ஒரு நன்மைக்கும் உதவா இப் புது முறைப் புணர்ச்சியைக் கண்டித்தது எவ்வாறு குற்றமாகும்? இக் கூறிய மாற்றங்களால் இரகுநாதனார் வாதம் ஏற்றுக்கொள்ளத் தக்கதல்ல என்பது வெள்ளிடை மலை என்க.

நிற்க. திருவாரூர். வைத்தியநாத தேசிகர் இயற்றிய இலக்கண விளக்க மூலமும் உரையும் அண்மையில் யான் பயின்று வருங்கால், ஒரு புதிய புணர்ச்சிமுறை அதனுட் போதரல் கண்டேன். அம்முறையும் அறிஞர் தம் ஆய்வுக் குரியதாகையின் ஈண்டு வெளியிடுகின்றேன். இலக்கணம் வல்லாரும், T. K. சி. முதலியாரும் ஏனையறிஞர்களும் உண்மை கண்டு தெரிக்க வேண்டுகின்றேன்.

இவ் விலக்கணம், அழியக் கிடந்த பல இனிய தமிழ் நூல்களை வெளியிட்ட பெருமைக் குரிய யாழ்ப்பாணம் சி. வை. தாமோதரம் பிள்ளையவர்களால் அச்சிற் புலவர்கள் மெச்சுமாறு பதிப்பிக்கப்பெற்றது. இஃ

விலக்கண விதிக்கு மாறாக முன்னுரை தொடங்கிப் பல்லிடங்களிலும் மேற் கண்டவாறுள:—

"பொருள் தாத்தக்கதாகலாற் றொகையார் பொருள்"
(பதிப்புரை. பக்கம் 13. வரி 3)
"மனத்தாற் றுணிவு தோன்ற" —(எழுத்து. பக்கம். 10. வரி. 4.)
"தலையாற் றுணிவு தோன்ற" — ,, ,, ,, 5.)
"அவற்றுட் றிரிந்ததன் றிரிபு" — ,, ,, 11. ,, 7.)
"இது மேற் றொகையான் ஒன்றாக" ,, ,, 29. &
,, ,, 12. ,, 10.)
"பகுதியுங் கூட்ட விரியாற் றமிழ் எழுத்து ,, ,, ,, 24.)
"பின்ன ரொருவாற்றாற் றழுவுதலானும் ,, ,, ,, 31.)
"மொழிமுதற்கட் றனித்துவரிற் சுட்டு ,, ,, ,, 14. 17.)
"நெறிப்பட என்றதனாற் றம்மிற் சேர்ந்து ,, ,, ,, 16. 32.)

மேற் போந்தவாறு சில பல இடங்களில் உள. இவைபோலின்றி வேறு சில விடங்களில் நேரிய முறையிலும் வந்து பயின்றுள.

"ஆய்த மென்றற் றொடக்கத்து" —(எழுத்து. பக். 15. வரி 8.)
"தனிநிலை என்றற் றொடக்கத்து" — ,, ,, 9.)
"னடத்தருனே"—"நடத்தருனே" — ,, 16. 24 & 30.)
"பகவன் முதற்றே உலகு" — ,, 17. 29)
"அம்மொழியிற் றீர்ந்து" — ,, 23. 30)

ஈண்டுக் காட்டிய எடுத்துக் காட்டினால் உண்மை யாதென உணம் முடியாமற் றவிக்க நேர்கிறோம். முன்னர்க் காட்டப்பெற்றவை பின்னர்க் காட்டப்பெற்ற நேரிய வழிக்கும் மாறாகவும், T. K. சி. முதலியார் எழுதா புது வழிக்கும் மாறாகவும் இருத்தல் காண்க. இவை, ஒருகால், அச்சுப் பிழையோ எனின். பிற் சேர்க்கையான திருத்தப்பட்டியிலும் திருத்தம் பெறவில்லை. எனவே இவற்றின் உண்மையை அறிஞர்கள் "ஆனந்த போதினி" வாயிலாக உணர்த்துமாறு வேண்டுகிறேன்.

இனி, "எது தமிழ்? எது தமிழ் மரபு? எது தமிழ்த் தொண்டு?" என்ற கடாக்கட் குரிய விடைகளை (தமிழ் நாட்டில், தமிழராய்ப் பிறந்தும், தமிழே பயின்றும், தமிழராய் வாய்ந்தும் மேற் குறித்த வினாக்களும் இன்றெழக் காரணராயும், நாம் நம்மையே அறிந்து கொள்ளாதவராயும் இருக்கும் நிலை, மிக்க நகையாடற் கிடனும் எனினும், நாவாடும் வன்னெஞ்சர் உறவாடிக் கெடுப்பதை நன்கு) அறிய விரும்புவோர், "தமிழ்ப் பொழில்" எனுந் திங்கள் வெளியீட்டின் சென்ற யாண்டுத் தொகுதியில் விரிவாய்க் காண்க. மற்றும், தமிழ்ப் புணர்ச்சிவிதி யறிய உணர்ச்சி யுடையோர் அதனை இலக்கணாசிரியர் வாய் இனிது கேட்டுத் தெளிக.

இதுவரை கூறியவற்றால், தமிழர் தம் தொன்னெறி யிலக்கணமே தனிமிகச் சிறந்தது, என்பதும், அவ் விலக்கணத்துக்கு மாசுண்டாக்கும் பிறமொழி இலக்கணச் சேர்ப்பை நீக்கிப் பழந்தமிழ்ப் புதுநெறி இலக்கணத்தைப் புதுப்பித்து மறுமலர்ச்சியுறச் செய்தல் வேண்டும் என்பதும், குளிக்கப் போய்ச் சேறு பூசிக் கொண்டவர்போல் திருத்தப்போய், ஒலி, மொழி இயல்புக்கு முற்றும் மாறானவற்றைக் கண்ட T. K. சி. உரை

# கரும்பின் வெற்றி

(ர. பா. மூ. கனி.)

“செழித்த நிலம். ‘அரிதாள் அறுத்துவா மறுதாள் பயிராகும்’ நெற்களங்களில் ‘மாடுகட்டிப் போரடித்தால் மாளாது செந்நெல் என்று ஆனைகட்டிப் போரடிப்’ பார்கள். இவ்வளவு வளம் யிருந்த நிலத்தை போக பூமி என்னாமல் வேறு என்ன சொல்ல முடியும! நெற்பயிரில் மட்டுமா, இன்சுவையைக் கொடுக்கும் கனிகள்தான் என்ன குறைவா? அவர்கள் பேசிய தமிழைப்போல் இனிய கரும்புக்குத்தான் என்ன குறை!” இப்படி யெல்லாம் புகழுவார்கள் தென்பாண்டி நாட்டை.

இங்கு செய்யப்பட்ட கரும்புப்பயிரின் விசேஷமே தனி. இதைப் பற்றிய ஒரு அழகான வருணனையை நமக்குக் கொடுத்திருக்கிறார் குற்றாலக் கவிஞர். இந்தக் கவிஞருக்குக் குற்றால நாட்டின் நங்கையர்களின் மேல் ஒரு பொறாமை. அவர்களுடைய நலன்கள் இருக்கின்றனவே அவற்றுக்கு மேலாக ஏதாவது ஒரு பொருள் அல்லது பல பொருள்கள் இருக்கவேண்டும், அவர்கள் கொட்டம் அடங்கவேண்டும். இதுதான் அவருடைய ஆசை. அவர்கள் பேசும்போது அந்தக் குரலினிமை ‘கோலக்குயிலோசை’யையும் வெல்வது கண்டு ‘இதைவிட மேலான இனிமை யுள்ளது ஏதாவது ஒன்று இருக்கக் கூடாதா?’ என்று எண்ணுவார். அவர்களுடைய தோள்களை மூங்கிலுடன் கூட ஒப்பிட முடியாமல், ‘அவற்றைவிட மேலான ஒன்று உலகில் இருக்கவேண்டும்’ என்று நினைப்பார். அவர்கள் புன்னகையில் இந்த உலகமே மயங்குவதுபோல் தோன்றும் அவருக்கு. அதற்குக் காரணம் அந்தப் ‘பழிதீர் வெண்பல்’ தானே. அதைவிட வெண்மையான, பிரகாசம் பொருந்திய பொருள் எங்கே அகப்படும் என்று ஏங்குவார். இவற்றிற்கெல்லாம் மேலாக அவர்களுடைய பெண்மை யிருக்கிறதே—அதனால் தானே அவர்களுக்கு இவ்வளவு செருக்கு—அதை ஒரு பொருள் வெல்ல முடியுமானால் எவ்வளவு நன்றாய் இருக்கும் என்று நினைப்பார். இத்தகைய எண்ணங்களிலேயே மூழ்கி யிருந்த அவரிடம் ஒரு நண்பர் தோல் சீவி, நறுக்கப்பட்ட சில கரும்புத் துண்டுகளைக் கொடுத்துச் சென்றார். அதைச் சுவைத்தார். அதன் ருசி, அதன் இனிமை அவர் மனதை அப்படியே கொள்ளை கொண்டு விட்டது. “ஆஹா! என்ன தீஞ்சுவை! பெண்களின்

---

நடை ஏற்றுக் கோடற்பாற் றன்று என்பதும், அம் முறைக்கு ம[illegible]ப் பெழுதிய S. நாராயணனார், S. பழநியப்பனார் வாதங்கள் ஏற்புடையன என்பதும், மறுப்புக்கு மறுப்பு எழுதிய இரகுநாதனாரின் வாதம் தவறானது என்பதும், ஒரு சிலர் புதுப் புது வழிகண்டு மதிப்புற விழைந்து பல வேறு போலிகள் கிளப்பினும், ஆன்றவிந் தடங்கிய சான்றோர் அவற்றைக் கண்டித்து உண்மையைத் தெள்ளிதின் உலகிற்குக் காட்டி நிலை நாட்ட வேண்டும் என்பதும் முறையே சொல்லப்பட்டன என்க. வாழிய செந்தமிழ்! வாழ்க நற்றமிழர்!

மொழி இனிமையை வெல்ல ஒன்றும் கிடையாதோ என்று நினைத்தோமே, இதோ இந்தக் கரும்பு வென்றுவிட்டது" என்று மகிழ்ச்சி யடைந்தார்.

அன்று மாலை அவர் வயல்களின் வழியாய்ப் போய்க்கொண் டிருந்தார். அங்கே ஒரு காட்சியைக் கண்டார். கரும்புகள் (கணுக்களில்) துண்டு துண்டாக வெட்டப்பட்டு ஒரு பக்கத்தில் கிடந்தன. வயல்களில் நெடுகக் குழிகளாகத் தோண்டப்பட்டிருந்தது. கவிஞர் சற்றே தாமதித்தார். ஆஜானுபாகுவான ஆடவர்கள் ஆவேசத்தோடு அந்தக் கரும்புத் துண்டுகள் குவிக்கப்பட்டிருந்த இடத்திற்குப் போயினர். அவைகளை எடுத்துச் சென்று தோண்டப்பட்ட குழிகளில் போட்டு மூடினர். அன்று கரும்பு தின்றதும் தான் அதன் ருசியைப்பற்றி நினைத்ததையும் ஞாபகப் படுத்தினர். தன்னைப்போலவே தான் அந்த ஆடவர்களும் உணர்ந்திருக்க வேண்டும் என்று நினைத்தார். ஆனால் அவர்கள் ஏன் கரும்புகளைத் துண்டு துண்டாக வெட்டிக் குழியைத் தோண்டி மூட வேண்டும்? அவருக்கும் அந்த ஆடவர்களுக்கும் இதுதான் வித்தியாசம். அவர் பெண்களின்மேல் பொறுமை கொண்டார். அவர்கள் பெண்களின் நலத்தில் பெருமை கொண்டார்கள். அவர் பெண்களின் குரல் இனிமையைவிட இனிய பொருள் ஒன்று இருக்கவேண்டும் என்று நினைத்தார். அவர்கள் பெண்களின் மொழி இனிமையைவிட இனிய பொருள் உலகில் இருக்கக்கூடாது என்று நினைத்தனர். அதனால்தான் பெண்களின் மொழியைவிட இனித்த அக் கரும்புகளின் மீது கோபங்கொண்டு அப்படித் துண்டுகளாக்கிக் குழிகளில் மூடினர் என்று கவிஞர் நினைத்தார். இவ்விதமாக எண்ணிக்கொண்டே வீடு போனர்.

சில மாதங்களாகக் கவிஞர் ஊரில் இல்லை. திரும்பி வந்தபின் அவர் திரும்பவும் அந்தப் பழைய வயல்களின் வழியாய்ப் போனர். உயர்ந்து வளர்ந்து உலக்கைபோல் பருத்த கரும்புகள் வயல் முழுதும் நிறைந்திருக்கக் கண்டார். 'இவற்றின் மீது கோபங்கொண்டல்லவா துண்டு துண்டாக வெட்டிக் குழிதோண்டி மூடினர்கள். இப்படி வளர்ந்துவிட்டனவே இவை!' என்று ஆச்சரியப்பட்டவாறே ஒரு கரும்பைத் தொட்டுப் பார்த்தார். அதன் தன்மை பெண்களின் தோளைவிட மேலாக இருந்தது. 'என்ன ஆச்சரியம்! நங்கையர் மொழியைப் பழித்ததென்று புதைத்த கரும்பா இப்படி அவர்களைப் பழி வாங்குகிறது! இப்பொழுது நிச்சயமாக இவை அவர்களின் தோட்களை வென்றுவிட்டன. இதற்கு என்ன செய்யப் போகிறார்கள் அந்த ஆடவர்கள்' என்று எண்ணியவாறே அந்த வயலின் ஒரு மூலையில் பார்த்தார். அங்கே நின்றுகொண்டிருந்தனர் சில ஆடவர்கள் கையில் அரிவாளுடன். அந்தப் பக்கமாகச் சென்றார் கவிஞர். அவர்கள் அந்தக் கரும்புகளை வெட்டுகின்றனர். ஒருவன் பக்கத்தில் சென்று பார்த்தார். அவன் தன் கையிலிருந்த அரிவாளால் ஒரு கம்பை அடிக்கணுவில் வெட்டினன். அதிலிருந்து கீழே விழுந்தது மிகப் பிரகாசம் பொருந்திய வெண்மையான ஒரு வஸ்து. அதைக் கையிலெடுத்தார் கவிஞர். அது ஒரு வெண் முத்து. பெண்களின் நகையைவிட எத்தனையோ மடங்கு பிரகாசம் பொருந்தியது அம்முத்து. 'சரி, பெண்களின் மேல் இன்னொரு வெற்றி? இந்த முத்து அவர்கள் பல்லைவிடப் பிரகாசம் மிகுந்ததுதான்,'

என்று அவர் சொல்வதை அந்த ஆடவன் கேட்டுவிட்டான். அவனுக்கு வந்துவிட்டது கோபம் கரும்பின்மேல். அந்தக் கரும்பை ஒடித்துவிடுவதென்று வளைத்தான். அது வில்போல் வளைந்தது. இதையும் புலவர் பார்த்தார். அவருக்கு ஒரு விஷயம ஞாபகத்திற்கு வந்தது. அதாவது 'கரும்புதான் மன்மதனுக்கு வில்லாகி,பெண்களின்மேல் பாணத்தைப்போடும்படி செய்து, அவர்களை வருத்துகிறது, அவர்கள் தங்கள் நாயகர்களைப் பிரிந்திருக்கும்போது மெலியும்படி செய்கிறது' என்று நினைத்தார். பெண்களின்மேல் பொறுமை கொண்ட புலவருக்கு, அவர்களுடைய பெண்மையை ஒரு பொருள் வெல்கிறது, அவர்களை வருத்துகிறது என்ற விஷயம் குதூகல மளிக்கிறது. அதைப்பற்றி நினைத்தவாறே நடந்தார். பெண்களின் பெருமைக்குக் காரணமான அவர்களுடைய சொல்லினிமை, தோள் அழகு, பல்லெழில், பெண்ணலம் இவற்றை வெல்லக்கூடிய ஒரே பொருளைக் கண்ட புலவருக்கு அதன்மீது ஒரு அன்பு உண்டாகிறது. தான் கரும்பின் மீது கண்ட குணங்கள் பெண்களின் நலன்களை எப்படி வெல்கின்றன என்பதை ஒரு முறை நினைவுபடுத்திப் பார்த்தார். அவ்வளவுதான். கரும்புபாடல் பெற்று விடுகிறது. இதோ பாட்டு:

"அந்நலார் மொழிதன்னைப் பழித்த தென்(று)
    ஆடவர் மண்ணில் மூடுங்கரும்பு
துன்னிமீள வளர்ந்து மடந்தையர்
    தோளைவென்று, சுடர்முத்தம் ஈன்று
பின்னும் அங்கவர் மூரலை வென்று,
    பிரியுங் காலத்தில் பெண்மையை வெல்லக்
கன்னல் வேளுக்கு வில்லாக ஒங்கும்..."

[அந்நலார்—அம் நல்லார்—அழகிய பெண்கள், துன்னி—நெருங்கி, மூரல்—பல், பெண்மை-பெண்ணுக்குரிய நலம் (அழகு), கன்னல் வேள்—கரும்பு வில்லுடைய மன்மதன்.]



# அறியாமை தானே!

(தி. முத்துராம கிருஷ்ணன்.)

ஆனந்தபோதினி 27-ம் தொகுதி 9-வது பகுதியிலும், 28-ம் தொகுதி 3-வது பகுதியையும் சிறிது புரட்டிப் பார்த்து விட்டு நான் இனி சொல்லப்போகும் விஷயத்தைக் கவனித்தால் தொடர்ச்சி நன்கு விளங்கு மென்று நினைக்கிறேன்.

எதற்கெடுத்தாலும் சத்து, சத்து வென்று பேசுகிறோமே, அது தான் என்ன, எப்படிப்பட்டது, என்ன நிறமென் றெல்லாம் பார்க்க வேண்டியது மிக மிக அவசியமல்லவா!

உளுத்த தோலும் வெளுத்த நரம்பும் உள்ள இந்த உடலில் இரண்டு சத்துக்கள் உண்டாகின்றன. அதாவது ஊன் சத்து. உப்புச் சத்து. எலும்பிலுள்ள 'கேல்ஸியம் பாஸ்பேட்' (Calcium phosphate), அதைத் தமிழில் 'சுண்ண ஒளிரி' என்று மொழி பெயர்த்திருக்கிறார்கள்), சிறு நீரிலுள்ள 'அமரி' (Ammonia), இரத்தத்திலுள்ள 'சோடியம் குளோரேட்' (Sodium chlorate), உணவைச் செரிக்கும் நீர்கள், தண்ணீர்—இவை உப்புச் சத்துக்களாம். ஊன் சத்துக்கள் மிகப்பல—மஸ்து, கறிப்பொருள், தசைப்பொருள் கொழுப்பு முதலியன. நமது உடலில் நூற்றுக்கு 69 உயிர்க் காற்று (Oxygen), 23½ கறிச்சத்து (Carbon), 10 நீர்க்காற்று (Hydrogen), 1·83 உப்புக்காற்று (Nitrogen), 2·5 சுண்ணம் (Calcium) 1 ஒளிரி (Phosphate), 1 க்ளோரைன் (Chlorine) 15 கந்தகம், ·133 பொட்டிலுப்பு (Potassium), ·11 சோடியம் (Sodium), 0834 மாங்கனீயம் (Magnesium), ·066 இரும்பு உள்ளன.

மனித உணவில் 100-க்கு 50 நீர், 32 சூட்டுப் பொருள், 10 தசைப் பொருள், 2 உப்புப்பொருள், 6 மஸ்து இருக்க வேண்டும். இந்த மாதிரியெல்லாம் கணக்குப் போட்டு வைத்திருப்பதில் குறைவு ஒன்றுமில்லை. அதன்படி நடக்க வேண்டியது தான், அதாவது மேற்படி எடைகள் குறைந்துவிடாதபடி நடக்க வேண்டியது தான் பாக்கி. அப்படி நடக்கத் தவறினலோ பிறகு பல்டி அடிக்க வேண்டியது தான் பாக்கியாக இருக்கும்.

இனி எந்தெந்த உணவில் எந்தெந்த சத்துக்கள் அமைந்திருக்கிறதென்று பார்ப்போம்.

| மாமிச உணவு (Animal food) | மாமிசமல்லாத உணவு. (Vegetable food) |
|---|---|
| 1. பாலும் அதனது வகையறுக்களாகிய தயிர் மோர், நெய், வெண்ணெய் | 1. கானம் முதலிய பயிறு வகைகள் |
| 2. மாமிசக் கொழுப்பு | 2. மொச்சை முதலிய தானியங்கள் |
| | 3. காய் கறிகள் |
| | 4. பழங்கள் |
| | 5. கிழங்குகள், வேர்கள். |

ஆராய்ச்சியாளர்கள் உணவு சத்துக்கள் ஐந்து வகைப்படும் என்று வகுத்திருக்கிறார்கள்.

## மஸ்து—Proteins (புரோடீன்ஸ்)

இந்த சத்து உடலைப் பண்படுத்தி உறுதிப் பண்ணுகிறது. மனிதனுக்கு வலுவெல்லாம் மஸ்து இல்லாவிட்டால் கிடைக்குமா? இந்தச் சத்து மாமிச உணவிலும் மாமிசமல்லாத உணவிலும் அமைந்திருக்கிறது. கட்டிடத்தை செங்கலில்லாமலும், சாந்து இல்லாமலும் கட்ட முடியுமா? முடியாது. அது போல இந்த மானிடக் கோயிலைக் கட்டுவதற்கு இந்த சத்து அவசியம் வேண்டிய திருக்கிறது. அதனால் தான் இதற்கு கட்டும் பொருள் (Building material) என்று பெயர் வைத்திருக்கிறார்கள். இந்தப் பொருள் பெரும்பாலும் கொழுப்பைத் தான் வளர்க்கிறது. இதில் உப்புச் சத்து அதிகம். இதை உப்புச் சத்து என்றும் சொல்லலாம். இதை சாப்பிட வேண்டியது மிக மிக அவசிய மென்றதனால் இந்தச் சத்துள்ள உணவுகளைத் தேடி வயிறு புடைக்க சாப்பிட வேண்டாம். ஏனென்றால் மஸ்து பாருங்கள். மிதமாக உண்ணவும். இது வயிற்றில் தான் ஜீரணமாகிறதாம்.

(பால், முட்டை, மீன் முதலிய மாமிச உணவிலும், தேங்காய், பாசிப் பருப்பு, கொத்துக் கடலை, நிலக் கடலை, உளுத்தம் பருப்பு, பாதாமி கோதுமை முதலிய மாமிசமல்லாத உணவிலும் மஸ்து அதிகமாம்.)

## "மினரல் சால்ட்ஸ்" Mineral Salts

இந்தச் சத்தினால் தான், நமது உடம்பிலுள்ள முக்கால்வாசி எலும்புகளின் கனம் நிறைந்திருக்கிறது. தசையும் இரத்தமும் கூட இந்தச் சத்தால் ஊறுகிறது. இது ஒருவகை ரஸத்தை (Juice) உண்டாக்குகிறது. உடம்பை இது தான் உண்டாக்குகிற தென்றால் கூட அது மிகையாகாது.

(பச்சைக் காய் கறிகளில் இந்தச் சத்து மலிந்து கிடக்கிறது.)

## கொழுப்பு — Fats

கொழுப்பில் மாமிசக் கொழுப்பென்றும், மாமிசமல்லாத கொழுப்பென்றும் இருவகை யிருக்கிறது. இது உடலைக் கொழுக்க வைக்கும். எரிவதற்கு விறகு எவ்வளவு அவசியமா யிருக்கிறது. அது போல இந்தப் பொருளும் எரிந்து பஸ்மமாய் போய் விடுகிறது. அதாவது உஷ்ணத்தைக் கொடுக்கிறது. உஷ்ணமில்லாமல் மனிதன் உயிர்வாழ முடியுமா? முடியாது. ஆகவே இந்தப் பொருள் உடலுக்கு பலத்தைக் கொடுத்து நல்ல சுறுசுறுப்பையும் கொடுக்கிறது.

தேங்காய், பால், பாதாமி பருப்பு, நிலக்கடலை, உளுந்து, கோதுமை, தீட்டரிசி, கேப்பை முதலியவைகளில் இந்த சத்து அமைந்திருக்கிறது. மற்றும் வெண்ணெய், நெய் முதலிய மாமிசக் கொழுப்பிலும் தேங்காய் எண்ணெய், நிலக்கடலை எண்ணெய் முதலிய மாமிசமல்லாத உணவிலும் இருக்கின்றன. இந்த உணவை ஒழுங்காய் சாப்பிடுவதால் வயிற்றுப் போக்கை (diarrohea) வராமல் தடுக்கிறது. தொத்து வியாதி வராமலும் தடுக்கும். ஆனால் கண்ணை மூடிக்கொண்டு மூக்கு நிறைய இழுக்க ஆரம்பித்தால் அஜீரணம் தான். அதன் பிறகு ஆபத்து தான்.

## 'கரி நீரகை' — arbohydrates

இவையும் எரிக்கும் வல்லமையுள்ளது. இது காய் கறிகளில் ஏராளமாய் அமைந்திருக்கிறது.

(கோதுமை, பயிர் வகைகள், உருளைக்கிழங்கு, சர்க்கரை முதலியவைகளில் இந்தச் சத்து நிறைந்திருகிறது. இதன் முக்கிய பகுதி உடலுக்குச் சூடளிக்கும் சூட்டுப்பொருள். இதை இனிப்பு என்னலாம். வெல்லம் சூட்டுப்பொருள். இதைக் கொஞ்சம் பார்த்துத்தான் சாப்பிட வேண்டும். உடலானது இனிப்பு மயமாய் மாறிவிடக் கூடாது. "மார்னிங் காபி" (Morning coffee) யாயிருந்து "பெட் காபி" (Bed coffee) வரையிலும் காபியிலே மயங்கிக் கிடக்கும் அன்பர்கள் சிறிது கவனிக்க வேண்டும். கடைசியில் (Diabetes) நீரழிவு என்ற வியாதியில் கொண்டு வைத்துவிடும். நீர்க்காற்றும் (Hydrogen) கரியும் (Carbon) இதனது முக்ய பாகமாகையால் இதற்கு "கார்போ ஹைடிரேட்ஸ்" (Carbohydrates) என்று பெயர் வந்திருக்கிறது. நீர்க்காற்றானது உடம்பை குளுமையாக்குகிறது. வியர்வையை வெளியேற்றுகிறது. நீர்க்காற்று குறைந்தால் உடல் வரண்டு போகும். பத்து, சொறிகள் உண்டாகும். மூச்சுத் திணறும்.

இளநீர், திராக்ஷை, நார்த்தை, ஆரஞ்சு, எலுமிச்சை, ஆப்பிள், கீரை வகை, வெள்ளரி இவை நீர்க்காற்றுள்ள பதார்த்தங்கள்.

### கரி—Carbon (A)

இது உடலுக்கு கனலளிக்கும். அரிசி, கோதுமை ரொட்டி, ஓட்ஸ் கேப்பை, அத்தி, தேன், கிழங்கு வகைகளில் கரிச்சத்து உள்ளது. இது மட்டுக்கு மீறி விட்டால் உடலைக் கெடுக்கும்.

### உப்புக்காற்று—Nitrogen (B)

இக் காற்று இல்லையேல் காதடைப்பு, நரம்புத் தளர்ச்சி, வாதம் முதலிய பிணிகளுண்டாகும். தேங்காய், கடலை வகை, பால், தயிர் முதலியவற்றில் உப்புக்காற்றுள்ளது. இவற்றை காய் கறி தானியங்களுடன் பக்குவமாக உண்க.

### சுண்ணம்—Calcium (C)

பல்லுக்கும் எலும்பிற்கும் வலிவு ஏற்படுகிறது. எலும்பில் 85% சுண்ண ஒளிரி. இது இரத்தத்திற்குச் செந்நிறம் தருகிறது. இஃதின்றித் தசை நார் உறுதி பெறாது; மூத்திரம் தடைபடும்; பல் சொத்தை விழும்.

பால், வெங்காயம், முள்ளங்கி, தேங்காய், கடலைகள், ஆரஞ்சு, எலுமிச்சை, வாழை, ஆட்டுப்பால், பெருந்தக்காளி, கீரை வகைகளில் சுண்ணச் சத்துள்ளது.

### "சோடியம்"—Sodium (D)

இது ஜீரணகாரி. சுண்ணத்துடன் சேர்ந்து உடலுறுதி செய்கிறது. இச்சத்து மிகுந்தவர்களை யெல்லாம் பயில்வானைக் காண்பீர்கள். "சோடியம் மனிதன் சுறுசுறுப்பா யிருப்பானும்" என்ற பழமொழி வேறு இருக்கிறது. சோடியக் குறைவால் சோர்வு உண்டாகும்; தலை நோகும்.

இளநீர், வழுக்கை, பாதாமி, ஆப்பிள், ஆள்வல்லிக்கிழங்கு, வெள்ள ரிக்காய், வால்நட் முதலியவற்றில் சோடியம் சத்து அதிகம்.

## பொட்டிலுப்பு—Potassium (E)

இது வயிற்றுக்கு உறுதி கொடுக்கும். நல்ல பசி கொடுக்கும். பொட்டி லுப்பின்றி வயிறு படுக்கும். தொண்டை நோயுறும், மலம் ஈக்கும், தசை கள் தளரும். எலும்புக்குச் சுண்ணம்போல் தசைக்கு பொட்டிலுப்பாகும். தேங்காய், இளநீர், பெருந்தக்காளி கனிவகை முதலிய இயற்கை உணவு களில் இது உள்ளது.

## மாங்கனியம்—Magnesium (F)

இது எலும்பிலும் தசையிலும் கலந்துள்ளது, உடம்புக்கு குளுமை தரும்; நல்ல தூக்க மளிக்கும்; இளம் பொலிவு வளர்க்கும். இப் பொருள் சூன்யமானால் தசைக் கட்டுகளில் பிடிப்புண்டாகும், தோலில் திரை விழும்.

தேங்காய், கோதுமை, எலுமிச்சை, திராக்ஷை, வெள்ளரிக்காய், அத்தி. பாதாமி முதலியவற்றில் இச் சத்து மிகுதி.

## இரும்பு—Iron (G)

உடலில் சுமார் 4-100 பங்குள்ளது. இது இரத்தத்தில் கலந்திருக் கிறது. உயிர்க்காற்றை பரவச் செய்கிறது. இதின்றி இரத்தம் கெடும், உடம்பு சோகை பிடிக்கும், அயச்சத்து உடலுக்கு வெப்பம், சுறுசுறுப்பு, இரத்தசுத்தி, கண்ணுக்கு ஒளி முதலியவற்றை அளிக்கும்.

தேங்காய், அரைக்கீரை, பசுங் காய்கறிகள், கனிகள், பருப்புகளில் அயச்சத்துள்ளது.

## அயோடின்—Iodine (H)

இது மூளைக்கு தெளிவையும் நரம்பிற்குறுதி தரும், கழுத்துச் சுரப்பி களில் (Thyroids) அயோடின் அதிகம். இதின்றி மூளை மெலியும், நினைவு பிசகும், அச்ச முண்டாகும். முகம் சுருங்கும்

அரிசி, வெங்காயம், ஆப்பிள், கடலை, பெருந்தக்காளி. உருளைக்கிழங் கின்தோல் முதலியவற்றில் அயோடின் சத்துள்ளது.

## குளோரைன்—Chlorine (I)

அழுக்குகளை வெளியேற்றி உடலைச் சுத்தம் செய்கிறது. பசி யுண் டாக்குகிறது. நறுங்கனிகள், காய்கறிகள், தேங்காய், வெள்ளரி, வால்நட், பாலடைக்கட்டி முதலியவற்றில் இச் சத்துள்ளது.

## ஒளிரி—Phophorous (J)

இது மூளை, நரம்பு, எலும்புகளிலுள்ளது. மூளை வேலைக்கு இது மிகவும் அவசியம். கண்ணுக்கு ஒளி தரும். தேங்காய், ஆரஞ்சு, அகத்தி இலை, மொச்சை, திராக்ஷை, முள்ளங்கி, வெள்ளரிக்காய், கடலைகள், ச்சைக்காய்கறிகள், கனிகளில் ஒளிரிச் சத்துள்ளது.

கந்தகம்—Sulphur (K)

மயிர், நகம், ஈரல், தோல் இவற்றை வளர்க்கிறது. அழுக்குகளை வெளியேற்றுகிறது. இதன் உதவியால் தான் ஈரல் பித்தஞ் சுரக்கிறது. இஃதின்றேல் ஈரல் நோயுறும், தோற் பிணிவரும்.

தேங்காய், வெள்ளரி, உருளைக்கிழங்கு, வெங்காயம், பெருந்தக்காளி, முள்ளங்கி இவற்றில் கந்தக முள்ளது.

உயிர்க்காற்று—(Oxygen) (L)

இது உடலுக்கு உயிர். உயிர்க்காற்று குறைந்தால் இரத்தம் கெடும்; சோகை பிடிக்கும்; தோல் வரண்டு வங்கு பிடிக்கும். நல்ல காற்று உடலிற் படும்படி உடையணிக. காற்றில் உலாவுக, காற்றூட வாழுக.

இலநீர், நன்னீர், காற்று, இரசமுள்ள காய்கறிகள், ஆப்பிள், ஆரஞ்சு, திராக்ஷைபோன்று ரசமுள்ள கனிகள், கடலை இவற்றில் பிராணசக்தி யுள்ளது. பிராணாயாமத்தால் உயிர்க்காற்று உடலில் நிறைந்து நல்ல பலனைத் தரும்.

## "வைடமின்"—Vitamin

வைடமினால் தான் மனிதன் வளர்ச்சி யடைகிறான் என்றால் கூட அது மிகையாகாது. ஏனென்றால் அவ்வளவு ஜீவசக்தி நிறைந்து நமது உடலுக்கும் அத்யாவசியமா யிருக்கிறது. இந்தமாதிரி சத்தும் அமைந்திருக்கிறதென்று சமீப காலத்தில் தான் டாக்டர்கள் கண்டு பிடித்தார்களாம். இந்த "வைடமின்" என்ற பதத்திற்கு தமிழில் ஒரு பெயரைச் சொன்னால் எவ்வளவு அழகாய் செந்தமிழில் எழுதலாம் என்றெல்லாம் கேட்டு விடாதீர்கள். தமிழிலே சரியான வார்த்தை அகராதியில் கூட கிடையாது. அகராதியைப் புரட்டிக்கொண்டு நேரத்தை வீணாகக் கழிக்கவும் பிரியமில்லை. ஏனென்றால் "வைடமின்" என்ற வார்த்தையே நமக்கு பழக்கமாகி இலேசாகவும் ஆகிவிட்டது. இச் சத்துள்ள ஆகாரங்களை சேர்க்க தவறி விட்டால் தாங்க முடியாத ஆபத்துக் குள்ளாக நேரிடும். ஆகவே அதைப்பற்றி நாம் நன்கு தெரிந்துகொண்டு அதன்படி கூடிய மட்டிலும் நடக்க முயல வேண்டும். தெரிந்த பின்பும் பராமுகமாக யிருப்போமானால் அது அறியாமையே தவிர வேறொன்றுமில்லை. இந்த "வைடமினை" ஐந்து விதமாக பிரித்து எடுத்து இருக்கிறார்கள். அதாவது வைடமின் A, B, C, D, E யென்று ஐந்து விதமாக.

வைடமின் A.

இந்தச் சத்து உடம்புக்கு மிகவும் அத்யாவசியமா யிருக்கிறது. இல்வாழ்க்கையை தங்கு தடையின்றி வெற்றிகரமாக நடத்த வேண்டுமானால் இந்தச் சத்து "பிளாங்கி"யாக போய் விடக்கூடாது. கடிகாரத்தை "ரிப்பேர்" பண்ணுகிறமாதிரி நம் உடலிலுள்ள தகாறுகளை இது "ரிப்பேர்" செய்கிறது. 'வைடமின்' ('A') இல்லாவிட்டால் தோல் வறண்டு போகுமாம். இதைவிட முக்கியமான விஷயம் இன்னும் ஒன்று இருக்கிறது. கண்ணைப்பற்றிய வியாதிகள் இந்த "வைடமின்" ('A') இல்லாத பாக்யம் தான். கண்ணைச்சுற்றி இருக்கும்படியான ஜவ்வு உலர்ந்து போகும். நாம் கூட விளையாட்டாக பேசிக்கொள்வோம். ஒருவன் கண்ணைப்பார்த்து நீ

சோவை, சோவை யென்று கேலியாக விளையாடுவ துண்டு. அதில் எவ்வளவு அர்த்த மிருக்கிறதென்று நமக்கு இன்னும் வெளிச்ச மாகவில்லை. நமது புண்ணிய பூமியாகிய பரத கண்டத்திலே 6,00,000 குருடர்கள் இருக்கிறார்களென்றால் பார்த்துக் கொள்ளுங்களேன். இதில் எதைத்தான் நொந்து கொள்வதென்று தெரியவில்லை. குருடர்களாக இருப்பது அவனவன் செய்த கர்மம், அவர்களுடைய பூர்வஜென்ம புண்ணிய பலம் அல்லவா! இந்த "வைடமின்' இல்லாமலா வந்துவிட்டது, அதெல்லாம் ஒன்றுமில்லை யென்று சிலர் வேதாந்தம் பேசலாம். ஆம், இதில்தான் அறியாமை நிறைந்திருக்கிறது. ஆகவே, கண் தெரியாம லிருப்பதற்கும் கண்ணைப் பற்றின சகல வியாதிகளுக்கும் "வைடமின்" ('A') இல்லாத குறைதான். அதிகநாள் 'வைடமின்' ('A') இல்லாமல் காலத்தைத் தள்ளி வந்தால் நரம்புக்கூடுகள் உண்டாகி, உடம்பு வளர்ச்சி குறைந்து தள்ளாட வேண்டியது வந்து விடும். ஆகையினால் "வைடமின்" 'ஏ' அமைந்த ஆகாரங்களை நாம் தினசரி உணவில் சேர்க்கவேண்டியது மிக மிக முக்யம். நாகரீகம் வளர வளர நரை ரொம்ப வருகிறதென்றால் மிகையாகாது. ஏனென்றால் நாம் அந்த காலத்தில் நமது முன்னோர்கள் சாப்பிட்ட சத்துள்ள ஆகாரங்களை சாப்பிடுவது கேவலம் என்று பராமுகமாயிருந்து விடுகிறோம். அப்படியிருப்பது கெடுதல். கீரை வகைகளை அதாவது அரைக்கீரை, முளைக்கீரை, முருங்கக்கீரை, பசலைக்கீரை, அகத்திக்கீரை முதலிய எல்லாக் கீரைகளையும் தவறாமல் சாப்பிடவேண்டும்.

கொத்தமல்லி, முட்டைகோஷ், கருவேப்பிலை, வெந்தியக்கீரை. துளசி இவைகளிலும் பழ வகைகளில் மாம்பழம், பப்பாளிப்பழம், ஆரஞ்சு, 'கேரட்' முதலியவைகளிலும் 'வைடமின்' (A) மலிந்து கிடக்கிறதாம். நாம் முக்யமாய் சாப்பிடுகிற பால், மோர், தயிர், நெய், முட்டை, அரிசியில் 'வைடமின்' (A) அதிகமாக மலிந்து கிடக்கிறது. பால் சாப்பிடுகிறதில் கவனிக்கவேண்டிய விஷயம் ஒன்றே ஒன்று இருக்கிறது. அதாவது பசுவின்பால் உடம்புக்கு மிகவும் நல்லது. அதுவும் பசும்புல் சாப்பிடும் பசுமாட்டின்பால் மிக மிக நல்லது. இன்னும் பாலில் இல்லாத வைடமின்களே கிடையாது. மற்றும் "காட்லிவர் ஆயில்," "ஹாலிபட் லீவர் ஆயில்" முதலியவற்றில் "வைடமின்" (A) மலிந்திருக்கிறதாம். ஒரு பள்ளிக்கூடத்தில் பார்வை குறைந்த சுமார் 40 குழந்தைகளுக்கு "ஹாலிபட் லிவர் ஆயில்" கொடுத்து வந்தார்களாம். சுமார் 30 குழந்தைகளுக்கு நாளாரம்பத்தில் கண்பார்வை தெரிய ஆரம்பித்ததாம். மாமிசம் சாப்பிடாதவர்கள் இதை எறிட்டுக் கூட பார்க்காதவர்கள்போல் பேசிக் கொண்டிருப்பார்கள். அவர்கள் சிவப்புப்பனை எண்ணெய் என்று ஒன்று இருக்கிறதாம். அதைச் சாப்பிட்டால் எல்லாம் "O. K." ஆய் விடுகிறதாம்.

## வைடமின் (B)

காய் கறிகளில் இந்த சத்து மலிந்து இருக்கிறது. உருளைக்கிழங்கு, டொமடா முதலியவைகளிலும் இந்த சத்து இருக்கிறது. ஆரஞ்சுபழத்திலும், பால் முட்டை கொட்டைகளிலும் அதிகமா யிருக்கிறது. "வைடமின்" (B) தான் இருதயம் முதலிய உள் அங்கங்களை பலமாகவும், சுகமாகவும் வைத்திருக்கிறது. அரிசி மாத்திரம் சாப்பிட்டு கொண்டிருப்பவர்களுக்கு "பெரி பெரி" (Beri Beri) என்று ஒரு வியாதி வருகிறதாம். இது

ஞல் கை, கால் மரத்து உணர்ச்சியற்றுப் போகிறதாம். கை கால்களும் வலிக்குமாம். இருதயம் பலவீன மாகுமாம். ஜப்பானில் ஒரு கப்பலிலுள்ள மாலுமிகளுக்கெல்லாம் ஒரு வியாதி வந்து செத்து செத்தி சிவலோகம் போய்க் கொண்டிருந்தார்களாம். அந்தக் கப்பலிலிருந்த ட்காகி என்ற ஒரு டாக்டர் இதற்கு இந்த எழுவெடுத்த அரிசியை மொக்கு மொக்கு என்று சாப்பிடுகிறதினுல் தான் வருகிறது என்று கண்டுபிடித்து அரிசியோடு மாமிசத்தையும் மீனையும் கொடுத்தாராம். அதன் பின்தான் மரண விகிதம் குறைந்ததாம். அடுத்தபடியாக தவிட்டுப் பலகாரங்களைச் சாப்பிடுவது மிகவும் நல்லதென்று முன்னமேயே நான் குறிப்பிட்டிருக்கிறேன். ஏனென்றுல் வியாதிக்கெல்லாம் அரசனுன "பெரு வியாதி"யைக் கூட தடுக்கும் வைடமின் அதில் இருக்கிறதாம். அதுதான் வைடமின் (B) 0 வைடமின் (B) பூஜ்யமா யிருப்பதால்தான் பெரு வியாதி வருகிறதாம். வைடமின் (B) தசை நார்களுக்கும் நரம்புகளுக்கும் வெகு அவசியம். வாய்ப்புண் கூட வைடமின் B குறைவா யிருப்பதால் தானும்.

கம்பு, பார்லி, கைக்குத்து அரிசி, பாசிப்பயிறு, அவரை, உலர்ந்த பட்டாணி, துவரைப்பருப்புகீ, ரைவகைகள், சிவப்பு முள்ளங்கி, "காலிபிளவர்," வெள்ளரிக்காய், வெண்டங்காய், வாழைக்காய் வேர்க்கடலை, பெரிய வெங்காயம், ஆப்பின் வாழைப்பழம், பேரீச்சம்பழம், மூரப்பா, பேரிக்காய், தக்காளிப்பழம், மாட்டிறைச்சி, ஆட்டுசூரல், ஆட்டிறைச்சி, பன்றி இறைச்சி முதலியவைகளில் வைடமின் (B) உண்டு.

## வைடமின் (C)

இந்தச் சத்து எலும்புகளை உறுதிப்படுத்துவதற்கும் இரத்தத்தைச் சுத்தமாக வைப்பதற்கும் மிகவும் அவசியம். குழந்தைகளுக்கு இந்த "வைடமின்" நிறைந்த ஆகாரங்களை கொடுப்பதில் தவறக்கூடாது. இந்த வைட்டமின் இல்லாவிட்டால் "ஸ்கர்வி" (Scurvy) என்ற வியாதி ஏற்படுமாம். அதாவது இந்த வியாதியின் அடையாளங்கள் பலவிதமா யிருக்கும். கை கால் வீங்கும்; நம் உடம்பிலுள்ள சிறு இரத்தக்குழாய்கள் ஒடிந்து போகும்; உடல் முழுவதும் சொரிசிரங்கு, கரப்பான் வரும். முழங்கால், முழங்கை, கணுக்கால் இவை யெல்லாம் அதிகமாக வலிக்கும்; பல் விழுந்து விடும். இந்த வியாதியைத் தக்க சமயத்தில் தடுக்காவிட்டால் ஆள் அபேஸ் ஆகிவிடும். உதாரணமாக ஒரு சிறு சம்பவம். போர்ச்சுகல் தேசத்திலிருந்து வாஸ்கோடி காமா இந்தியாவுக்கு கப்பல் மார்க்கமாக வந்ததென்பதை கேள்விப் படாதவர்கள் இருக்க மாட்டார்கள். அவனுடைய 160 மாலுமிகளுள் 100 பேருக்கு "ஸ்கர்வி" வியாதி கண்டு இறந்தார்கள். இதற்கு ஆரஞ்சு பழமும் எலுமிச்சம்பழம் சாறும் கைகண்ட மருந்து என்று கண்டு பிடித்திருக்கிறுர்கள். காய்கறிகளிலும் "வைடமின்" (C) இருக்கிறது. சிறுகீரை, கோசுக்கீரை, செலரிக்கீரை, கொத்தமல்லி, கருவேப்பிலை, உருளைக்கிழங்கு, முள்ளங்கி, பாகற்காய், கத்தரிக்காய், அவரைக்காய் முதலிய காய்கறிகளிலும், மிளகாய், இஞ்சி, சீரகம், வெங்காயம், புளி, கொய்யா, பலாப்பழம், எலுமிச்சைச்சாறு, எலுமிச்சம் பழம் சாறு, பப்பாளி முதலியவைகளிலும் "வைடமின்" (C) இருக்கிறது. மாமிச உணவில் ஒன்றிலும் "வைடமின்" (C) கிடையாது. கடலைப்பயிறு முதலியவைகளில் வைடமின் (C) கிடையாது. ஆனுல் அதை ஊறப்போட்டு காற்றுட துணி

யில் பரப்பி அதன்மேல் ஒரு ஈரத்துணியில் நீர் தெளித்தால் அது முளை விடும். அந்த முளையிலேதான் "வைடமின்" (C) இருக்கிறது. நெல்லிக் காயில் "வைடமின்" (C) அதிகம். மூன்று ஆரஞ்சுப்பழம் ரசம் ஒரு நெல்லிக்காயில் இருக்கிறது. இந்த சூக்ஷ்மம் யாருக்கு வெளிச்சமா யிருக்கிறது. பழங்களெல்லாம் வாடிப்போனால் "வைடமின்" (C) மாயமாய் மறைந்து விடுமாம். இனிமேலாவது நெல்லிக்காய்க்கு கிராக்கி ஏற்படுமென்று நினைக்கிறேன்.

வைடமின் D.

"வைடமின்" D இல்லாதவர்களுக்கு எலும்பைப் பற்றிய வியாதிகளும் பல்லைப்பற்றிய வியாதிகளும் வருமாம். கால் வளைந்திருப்பது, கூன் முதுகு, இடுப்பு வளைந்திருப்பது, முட்டுகள் வீங்கி யிருப்பது இவையெல்லாம் "வைடமின்" D இல்லாததினால்தான். பெண்கள் இடுப்பு எலும்பு இதனால் குறுகி யிருக்கும். அப்படி யிருந்தால் பிரசவ காலத்தில் ஒன்று அவர்கள் இறந்து போவார்கள் அல்லது அவர்களுக்குப் பிறக்கும் குழந்தைகளுக்கு தலையில் காயம் ஏற்பட்டு பாரிச வாயுவினால் இறந்து போகும். அதேமாதிரி பற்களும் பலவீன மடையும். நாற்றம் நாறும். அதனால் பல வியாதிகளும் வரும். அடுத்தபடியாக முக்யமானதென்னவென்றால் சூரிய வெளிச்சம் நம் உடம்பில் அவசியம் படவேண்டும். அமராவதி மாதிரி வெயில் படாத செல்வப்பிள்ளையாக வாழக் கூடாது. சூரிய வெளிச்சத்தில் காய்வதால் அதிலும் நன்றாய் எண்ணெயையாவது வெண்ணெயையாவது தடவி காய்வதால் "வைடமின்" (D) கிடைக்கிறதாம். நவநாகரீகத்தில் மூழ்கி யிருப்பவர்கள் கர்நாடகம், கெடுதல் என்றெல்லாம் சொல்லி தப்பித்துக் கொள்வார்கள். அதனால் எலும்புகளுக்கு பலமில்லாமல் போய் விடுகிறது என்பதை அறியாம லிருக்கிறார்கள். பற்கள் பலமுள்ளதாகவும் ஒழுங்காகவும் வளர்வதற்கு "வைடமின்" 'D' தேவை. சூரிய நமஸ்கார தேகப்பயிற்சியின் முக்யத்வம் இப்பொழுது நமக்கு விளங்கி யிருக்கு மல்லவா! பெண்கள் கூட காலையில் ஸ்நானம் செய்துவிட்டு அரசமரத்தை சுற்றுவார்கள். ஐயோ, பிள்ளை வரத்திற்கு தான் என்று அவர்கள் கூட நினைத்துக் கொள்கிறார்கள். ரகஸ்ய மெல்லாம் சூரிய வெளிச்சம் உடம்பில் படவேண்டும் என்கிற சங்கதியில்தான் அடங்கி யிருக்கிறது. ஆகவே இனிமேலாவது உடம்பிலே, ஒன்றுக்கு இரண்டு உபத்திரவத்திற்கு மூன்று என்றமாதிரி துணிகளைப் போட்டு மூடவேண்டாம். சூரிய வெளிச்சமும், நல்ல காற்றும் நம் உடம்புக்கு மிக மிக அவசியம். "காட்லிவர் ஆயிலிலும்," முட்டையிலும், பசும்புல் தரையில் மேயும் பசுவின்பால், மோர், நெய்யிலும், வெண்ணெய், காய்கறிகளிலும் இது இருக்கின்றது. வெண்ணையை தாராளமாய் சாப்பிட வேண்டும். "வைடமின்" D வந்து விடும். "வைடமின்" D இல்லாவிட்டாலோ "ரிக்கட்" என்ற வியாதி கண்டு விடும்.

அடே அம்மா! இவ்வளவையும் சாப்பிட வேண்டுமானால் அதற்கு அரிசி (பணம்) யாரிட மிருக்கிறது என்று நீங்கள் பிரமிப்பு அடையலாம். அதெல்லாம் கவனித்து சாப்பிட்டால் ஒருவருக்கு ஒரு மாதத்துக்கு ஐந்து ரூபாய் போதும். அதை இன்னும் அறியாமல் பொதுஜனம் பயந்து கொண்டிருக்காது என்றுதான் நான் நம்புகிறேன்.

# சிவராமன்

(L. V. S. மணியன்)

(சென்ற இதழின் தொடர்ச்சி.)

இதற்குப் பிறகு சிவராமனுக்கு வேலை ஆய்விட்டது என்று சொல்ல வேண்டியது அவசியமில்லை. வேலையாகும் வரையில்தான் சாப்பாட்டிற்குக் கஷ்டப்பட்டுக் கொண்டிருந்தான். பிக்ஷையெடுத்தான். அதற்குப் பிறகு பிக்ஷையெடுக்கவில்லை. தாயும் மகனும் கல்யாணராமய்யரை சந்தோஷமாக வாழ்த்திக்கொண்டு வசித்து வந்தார்கள். சிவராமன் இப்பொழுது பிக்ஷைக்குப் போகாவிட்டாலும், லீவு நாள்களில் கல்யாணராமய்யர் வீட்டிற்குப் போய்வந்துகொண்டிருந்தான். சமயம் வாய்த்தபோது கோமளமும், சிவராமனும் சந்தித்துப் பேசிக் கொண்டிருந்தார்கள். நாளாக ஆகக் கோமளத்திற்கு சிவராமனிடம் கொண்ட காதலானது வளர்ந்து கொண்டே வந்தது. சிவராமனும் இதை யறிவான். ஆனால் தனது ஏழ்மை நிலைமையை நினைத்து மிகவும் வருந்திக் கொண்டிருந்தான்.

நான்காவது பாரம், பாஸ் பண்ணினதும் கல்யாணராமய்யர் கோமளம் பள்ளிக்கூடம் போவதை நிறுத்திவிட்டு, வீட்டிலேயே வீணை முதலியன சொல்லிக்கொடுக்க ஏற்பாடு செய்தார்.

கோமளத்தின் கல்யாணத்தைப் பற்றி பேச்சுகள் எழ ஆரம்பித்தது. அநேக ஜாதகங்கள் வந்தன. சாதாரணமாக சுந்தரி கணவன் பேச்சிற்கு இரண்டு சொல்வதில்லை யென்றாலும் கோமளத்தின் கல்யாண விஷயத்தில் இருவருக்கும் அபிப்பராய பேதங்கள் இருந்தன. சுந்தரிக்கு கோமளத்தை நிறைய சொத்துள்ள இடமாய், சம அந்தஸ்துள்ள இடத்தில் கொடுக்க வேண்டும் என்றிருந்தது. குறைந்தது மாப்பிள்ளை, ஐ. ஸி. எஸ். படித்தவனாகவும் இருக்க வேண்டும் என்பது அவள் எண்ணம். அப்படி யிருந்தால் கோமளத்திற்கு புக்ககத்தில் ரொம்ப கஷ்டமில்லாம லிருக்கும் என்று எண்ணினாள். ஆனால் கல்யாணராமய்யர், தான், சிறு வயதில் எப்படி படிக்கக் கஷ்டப்பட்டதும், பிறகு எவ்விதம் முன்னுக்கு வந்து இப்பொழுது கலெக்டர் வேலை பார்ப்பதும் எல்லாம் சொன்ன பிறகு, அதிர்ஷ்டம் இருந்தால் எல்லாம் வருகிறது என்று மனதைச் சமாதானப்படுத்திக் கொண்டாள்.

சுந்தர கனபாடிகள் காலமான பிறகு, மோரூர் ராகவ சாஸ்திரிகள் கலெக்டர் வீட்டு வைதிகக் காரியங்களைப் பார்த்து வந்தார். அவரிடமும், "பிள்ளை ஏழையா யிருந்தாலும் பாதகமில்லை, நல்ல குணமுள்ளவனாகவும், கண்ணிற்கு அழகாகவும் இருந்தால் போதும். ஜாதகம் பொருந்தினால் சொல்லுங்கள். கோமளத்தைக் கல்யாணம் பண்ணிக் கொடுத்து விடுகிறேன். கூடிய வரையில் பிள்ளை நம்ம ஆத்தோடு இருப்பவனாக பாருங்கள். எனக்கும் பிள்ளைக் குழந்தை யில்லாததால், பிள்ளைக்குப் பிள்ளையாயும், மாப்பிள்ளையாகவும் இருப்பான்," என்று கல்யாணராமய்யர் சொல்லி வைத்திருந்தார்.

ஆபீஸ் விஷயமாக, அன்றையதினம், வெகு நேரம் வரையில் கல்யாணராமய்யருடன் பேசிவிட்டுப் போகும்போது, ராகவ சாஸ்திரிகள் கலெக்டர் வீட்டிற்கு வந்தார்; அவருக்கும் வந்தனம் செய்து விட்டு சிவராமன் வீட்டுக்குப் போனான். அவன் தந்தையிடம் தான் ராகவ சாஸ்திரிகள், அத்தியயனம் செய்தது. அவர் காலமானதும், அவர் பார்த்து வந்த வைதீகங்களையெல்லாம் ராகவசாஸ்திரிகள் பார்த்து வந்தார். சிவராமனைச் சிறு குழந்தை முதல் தெரியுமாதலாலும், அவனுடைய நற்குணத்தையும் கண்டு அவனிடம் இவருக்கு அதிக அன்பு உண்டு. சிவராமனும், தனது தந்தை காலமானதும் ராகவ சாஸ்திரிகளையே தந்தை போல பாவித்து அவரிடம் மிகவும் அன்பும், அடக்க ஒடுக்கமும் உடையவனாக இருந்தான்.

"என்ன சாஸ்திரிகளே, ஏதாவது ஜாதகம் கிடைத்ததா? குழந்தைக்கும் வயது ஆகிறது. நான் சொன்னதெல்லாம் ஞாபகம் இருக்கிறதா?" என்று கல்யாணராமய்யர் கேட்டார்.

"நானும் அலைந்து திரிந்து கொண்டு தானிருக்கிறேன். நீங்கள் சொன்ன பிரகாரம் கிடைப்பது ரொம்பவும் கஷ்டமா யிருக்கிறது. அப்படி ஒன்று இரண்டு கிடைத்தாலும் பொருத்தமாக இல்லை. இப்ப ஒரு யோசனை எனக்குத் தோன்றுகிறது. என் அந்தமாதிரி நீங்கள் செய்தால் என்ன?" என்றார் சாஸ்திரிகள்.

"என்னமோ. புதிர் போடுகிற மாதிரி சொல்கிறேளே. விஷயத்தை சொல்லுங்கோ'" என்றார் கலெக்டர்.

"இவ்வளவு நாளாக ஞாபகம் வரவில்லை. என்னுடைய குருவின் பிள்ளை சிவராமன் ஞாபகம் இப்பொழுது தான் அவனைப் பார்த்ததும் வந்தது. அவனுக்குக் கோமளத்தைக் கொடுத்தால் என்ன? தங்கமான பையன். அவன் தாயைத் தவிர அவனுக்கு வேறு நெருங்கின பந்துக்கள் கிடையாது. கல்யாணமானதும் அவனை ஆத்தோடு நீங்கள் வைத்துக் கொள்ளலாம்," என்றார், சாஸ்திரிகள்.

கல்யாணராமய்யர் சந்தோஷத்தோடு, "எனக்கும், ஆபீஸ் தொல்லையில் ஞாபகமேயில்லை. இத்தனைக்கும் சிவராமனை தினமும் பார்த்துக் கொண்டுதா னிருக்கிறேன். இப்பொழுது தான் நீங்கள் சொன்னதும் ஞாபகம் வருகிறது. நான் தான் வேலை பண்ணி வைத்தேன். ரொம்ப ஒழுங்காக வேலை பார்க்கிறான். பையனும் தங்கக் கம்பி. குலம் கோத்திரம் விசாரிக்க வேண்டியதில்லை. நீங்கள் ஜாதகத்தைப் பாருங்கள், பொருந்தியிருந்தால் இந்த தை மாதமே கல்யாணத்தைப் பண்ணி விடலாம்," என்று மிகவும் குதூகலமாகச் சொன்னார்.

இதைப் பக்கத்திலிருந்து கேட்டுக் கொண்டிருந்த சுந்தரி, "பையன் என்னமோ, நல்ல பையன் தான். அதைப் பற்றி நான் ஒன்றும் குறை சொல்லவில்லை. கையில் காலணா சொத்து கிடையாது. தகப்பனாரில்லாத பிள்ளை. நம்ம குழந்தைக்கு புக்ககம் என்று ஒருநாள் கூட ஆசைக்குப் போவதற்கில்லை" என்று வருத்தப்பட்டுக் கொண்டு சொன்னாள்.

"கையில் சொத்து இல்லை, சொத்து இல்லை, என்கிறாயே, உனக்கு வேறு ஏதாவது பிள்ளை இருக்கா? நம்ம சொத்தெல்லாம் நம்ம குழந்

தைக்குத்தானே. குப்பையோடு குப்பையைப் போடறாப் போலே, பணக்காரப் பிள்ளையாய்ப் பார்த்துப் பணத்தோடு பணத்தைக் கொண்டு போய் சேர்க்க வேண்டுமாக்கும். ஏழைகளுக்கு பார்த்துக் கொடுத்தா, ரொம்ப சந்தோஷத்தோடு நம்ம குழந்தையை நன்றாக வைத்துக் கொள்ளுவார்கள். சிவராமனைப் போல மாப்பிள்ளை நமக்குக் கிடைக்க ரொம்ப கொடுத்து வைத்திருக்க வேண்டும். அவன் குணத்திற்கு என்ன குறைச்சலா? அழகிற்கென்ன குறைச்சலா? வேலையும் நன்றாகச் செய்கிறான். நான் ரிடையர் ஆவதற்குள்ளாக, என்னுட்டமா வேலையாகும் படியான நிலைமைக்கு பிரமோஷன் பண்ணி வைத்து விடுகிறேன். அப்புறம் கோமளத்திற்கென்ன குறைச்சல்?" என்று மூச்சு விடாமல் சந்தோஷத்தோடு சொன்னார் கலெக்டர்.

இவ்வளவு பேச்சும், கோமளம் தனது அத்தைவீடு போயிருந்தபோது நடந்தது. அவள் வீட்டிலிருந்தால் கட்டாயம் அவள் காதில் விழுந்திருக்கும். தனது கல்யாணத்திற்கு பிரயத்தனங்கள் நடப்பது தெரியுமேயொழிய மற்ற சமாசாரங்கள் ஒன்றும் அவளுக்குத் தெரியாது. "தனக்கு சிவராமனைப் பிடித்திருக்கிறது. அவனைத் தான், கல்யாணம் செய்து கொள்ளுவேன்" என்று அவளால் எப்படி சொல்ல முடியும்? அவளும் எப்படி சொல்வது என்று தெரியாமல் தவித்தாள். அவள் ஒரே பெண் பெற்றோர்களுக்கு. அவர்கள் பேச்சைத் தட்டமுடியுமா? எல்லா சொத்துக்களும் தனக்குத்தான் சேரப்போகிறது என்றாலும், மிகவும் ஏழையான சிவராமனை மணந்து கொள்கிறேன் என்றால், தங்கள் அந்தஸ்துக்கு குறைவு என்று சொல்வார்களோ என்று அஞ்சினாள் கோமளம். தன் பெற்றோர்கள் மனதை சந்தோஷப்படுத்துவதற்காக, வேறு யாரையும் மணம் செய்து கொள்ள விரும்பவில்லை அவள். சிவராமனிடம் உள்ளன்புடன் காதல் கொண்டு விட்டாள். இப்பொழுது அவள் இருதயத்தைப் பிளந்து பார்த்தால் சிவராமனின் உருவம் பதிந்திருப்பதைக் கட்டாயம் பார்க்கலாம். சிவராமன் இல்லையானால் அவளுக்கு இந்த உலகமே யில்லை. சிவராமனை மணக்க முடியாவிட்டால், கன்னிகையாகவே யிருந்து விடுவது என்று கோமளம் தீர்மானித்து விட்டாள். ஆனால் அப்படி கன்னிகையாயிருக்க தனது மாதா பிதாக்கள் விடுவார்களா என்று அவளுக்குச் சந்தேகந்தான். பின் எப்படித்தான், அவர்களிடம் சிவராமனைத் தவிர வேறு யாரையும் தன்னால் மணந்துகொள்ள முடியாது என்று சொல்வது? அதற்கும் தைரியம் இல்லை. பாவம்! ஒரு பக்கம், தாய் தந்தையாருக்குத் தான் செய்ய வேண்டிய கடமையும், மற்றொரு புறம் காதலும், அவளுக்கு என்ன செய்வது என்று தோன்றாமல் செய்தன. இப்படி கோமளம் தவித்துக் கொண்டிருந்த சமயத்தில் தான் அவள் தன் அத்தை வீட்டிற்குச் சென்றது.

"உங்களைத் துரை கூப்பிடுகிறார், ஸார்," என்று, என்றுமில்லாமல் பியூன் வந்து சொன்னதும் சிவராமனுக்கு மனம் பதைபதைத்தது. தான் என்ன தப்பு செய்து விட்டோமோ என்று மிகவும் அஞ்சினான்.

துரை யென்றது, வேறு யாருமில்லை. கல்யாணராமய்யரைத் தான். ஆபீஸ்களிலேயே, பெரிய பதவியை ஒரு இந்தியர் வகித்தாலும் அவரை துரை யென்றே கூப்பிடுவது வழக்கம்.

கலெக்டர் ரூமிற்கு சிவராமன் சென்றான். சிரித்த முகத்துடன் தானிருந்தார் கல்யாணராமய்யர். சிறிது தைரியம் வந்தது. அவர் முன்னால் போனான், சிவராமன். அவனைப் பார்த்ததும், கல்யாணராமய்யர்,—சிரித்துக்கொண்டே, "என்ன, சிவராமா, உனக்கு ஒரு பெண் பார்த்திருக்கிறேன். பெண் கிளி போலிருக்கிறாள். நான்காவது பாரம் வரையில் படித்திருக்கிறாள். நான் பண்ணி வைத்தால் உனக்கு பண்ணிக்கொள்ள சம்மதம் தானே," என்றார்.

கல்யாணம் என்ற பேச்சைக் கேட்டதுமே, சிவராமனுக்குத் தூக்கி வாரிப்போட்டது. அவனோ கோமளத்தை முழுமனதுடன் காதலிக்கிறான். அவளும் காதலிக்கிறாள். அவனுக்கு, கோமளம் தனக்குக் கிடைக்கமாட்டாள் என்று தோன்றினாலும், தன்னை அவள் உண்மையாக நேசிப்பதால் ஏதாவது ஒரு உபாயம் செய்து தன்னை மணந்து கொள்வாள் என்று ஒரு குருட்டு நம்பிக்கையிருந்தது. ஒரு வேளை அவளால் முடியாமற் போனாலும், போகும். ஆதலால், அவன், தீர்மானம் செய்து கொண்டிருந்தான். ஆகையினாலே, "நீங்கள் செய்து வைத்தால் நான் என்ன தடை சொல்ல இருக்கிறது? ஆனால், இப்பொழுது எனக்கு கல்யாணத்திற்கு என்ன அவசரம்? ஸார். இன்னும் இரண்டு, மூன்று வருஷங்கள் போகட்டும் என்று பார்க்கிறேன்." என்று நாசூக்காக சிவராமன் சொன்னான்.

சிரித்துக்கொண்டே, "இப்படித்தான், எல்லாரும் சொல்வது வழக்கம். நானும் இப்படித்தான் உன்னைப் போலிருக்கும் போது சொன்னேன். சாயந்திரம், உன்னுடைய ஜாதகத்தை வீட்டிற்குக் கொண்டுவா" என்றார்.

சிவராமனுக்குக் கொஞ்சம் சந்தோஷம் உண்டாயிற்று. "எனக்கு ஜாதகம் கிடையாது ஸார். அப்பா ஏதோ எழுதி வைத்திருந்தாராம். அவர் உடம்பு சௌகரியமில்லாமல் திடீரென்று காலமானதால் அவர் எங்கு ஜாதகம் வைத்தாரென்று தெரியவில்லை. வீடெல்லாம் தேடியாயிற்று; அகப்படவில்லை. வேறு ஜாதகம் எழுதலாமென்றாலும், அம்மாவுக்கு, தேதி, கிழமை, நாழிகை யெல்லாம் மறந்து போய் விட்டதாம்," என்று, ஜாதகம் இல்லையென்றாலாவது கல்யாணப் பேச்சை நிறுத்தி விடுவார் என்று சந்தோஷத்தோடு சொன்னான்.

ஆனால், "ரொம்ப நல்லதாகப் போயிற்று. ஜாதகம் இருந்தால், பொருத்தமில்லாமல் போனால் மிகவும் கஷ்டமாக இருக்கும். தை மாதம் முகூர்த்தம் வைத்து விடுகிறேன். சரி, நீ போகலா"மென்று பல்லெல்லாம் சந்தோஷத்தால் தெரியும்படி சிரித்துக்கொண்டே கல்யாணராமய்யர் சொன்னார்.

சிவராமனுக்கு, அவன் நினைத்தது ஒன்றாக அவர் சொன்னது வேறொன்றாகப் போய் விட்டதால் ஒன்றும் தோன்றாமல் அங்கிருந்து தன்னுடைய வீட்டிற்கு வந்தான்.

(தொடரும்.)

# ஜ்யோதிஷ பல ரகஸ்யம்

(சி. பி. ஆனந்தம்.)



## 16. சுக்ரன்—ஸ்திதி பலம்

“ஸ்ருஷ்டியின் அறிவதற்கரிய இரகஸ்யங்களை உதயம் முதல் ஒடுக்கம் மட்டும் உள்ள எல்லா எல்லைகளிலும் கொண்டிருப்பது ‘சுக்ரப் பேருலகம்’ என்று ‘பல பாகம்’ வர்ணிக்கும் ‘வெள்ளி, அல்லது ‘சுக்ர’னின் பலன்களுக்குரிய வரைகளை (எல்லைகளை) வானத்தே காணலாம். பொதுவில், அதன் சுபாவ பலன்களுக்குரிய இடங்கள் (எல்லைகள்) வான மண்டலத்தே இரண்டு உள்ளன. அவற்றுள் ஒன்று பாகை முப்பது முதல் பாகை அறுபது மட்டும் காணத்தக்க இடமாகும். மற்றொன்று பாகை நூற்று எண்பது முதல் பாகை இருநூற்றுப்பத்து மட்டும் இருப்பதாகும். இவற்றுள் முன்னது ‘விருஷபம்’ (Taurus) என்றும், பின்னது ‘துலாம்’ (Libra) என்றும் சொல்லப்பெறும். இவ் இராசிகள் இரண்டும் சுக்ரனுக்கு அதன் சுபாவ பலன்களுக்குரிய ‘ஆட்சி வீடுகள்’ (Ruling Houses in the Heavens) ஆகும். இவற்றுள் இரண்டாவதாக வரும் ‘துலாம்’ என்னும் இராசி இடம் சுக்ரனுக்குரிய சுபாவபலன்கள் நேர்முகத்து நிகழ்வதற்கான இயல்பு கொண்டது; முதற்கண் வரும் ‘விருஷபம்’ என்னும் இராசி இடம் அதற்குரிய சுபாவபலன்கள் எதிர்மறை இயல்பில் நேருவதற் குரியதாக விருக்கும். எனவே, இவ்வழி பலன் நிகழ்த்துவதில் நேர்முக – சுக்ரன் (Venus-Positivea), எதிர்முக-சுக்ரன் Venus-Negetive) என முறையே இரண்டுவித பலங்களை (Powers) துலா-விருஷபங்களுக்குக் கொள்ளலாம்.

இவ் விரண்டினுள்ளும் நேர்முக பலனுக்குரிய இராசி இடம் (துலாம்) அதிகம் பலம் வாய்ந்தது. அத்துடன், அது சரகேந்திரங்களுள் ஒன்றாக விருத்தலின், அந்த பலம் மேலும் விசேஷங் கொண்டதாக விருக்கும். அதாவது பொருள் எல்லையின் சித்திகளின் தொடர்பு இடையீடின்றி கெடுவிலும் இருந்து வரும். இந்த இராசி இடத்தில் முதற்கண்ணுள்ள பாகை பதினைந்து அளவுடைய எல்லை முழுவதும் ‘மூலத் திரிகோண’ பலங் கொண்டது. அதாவது பாகை நூற்று எண்பது முதல் பாகை நூற்றுத் தொண்ணூற்று ஐந்து மட்டும் சுக்ரனுக்கு ‘மூலத்திரிகோண’ பலத்திற்குரிய எல்லையாகும். ‘மூல த்ரிகோண பலம்’ என்பது ஆட்சி இடமான ஸ்வக்ஷேத்திர ராசியினும் அதிக பலமுடையதாகும். மற்று, அதன்மேல் அந்த இராசி முழுவதும்—அதாவது பாகை நூற்றுத் தொண்ணூற்று ஐந்து முதல் இருநூற்றுப்பத்து மட்டும் ஆட்சி பலங் கொண்டதாய் சுக்ரனது நேர்முக இயல்பில் பலனுக்குரியதாக விருக்கும்.

பாகை முன்னூற்றுமுப்பது முதல் பாகை முன்னூற்று அறுபது மட்டும் இடம் பெறும் ‘மீன ராசி’ (Pices) சுக்ரனுக்கு ‘உச்ச’ பலத்திற்குரியதாகும். இதில் முதற்கண்ணுள்ள இருபத்தேழு பாகை இடமும். அத

வது பாகை முந்நூற்றுமுப்பது முதல் பாகை முந்நூற்று ஐம்பத்தேழு மட்டும் சுக்ரனுக்கு 'அதி உச்ச' பலம் வாய்ந்த எல்லையாகும்.

இந்த உச்சராசி இடமான மீனத்திற்கு எதிர்கோடியில்—அதாவது ஸப்தம் (ஏழாவது) ராசியான 'கன்னி' (Vergo) சுக்ரனுக்கு 'நீச' மாகும். இது பாகை நூற்றுஐம்பது முதல் பாகை நூற்று எண்பது மட்டும் இடங் கொண்டிருக்கின்றது. இதிலும் உச்ச ராசியிற் போலவே முதலிலுள்ள பாகை இருபத்தேழும்—அதாவது பாகை நூற்று எழுபத்து ஏழு மட்டும் 'அதி நீச' எல்லையாக விருக்கிறது. அவ் இராசியில் இதர இடம் முழுவதும் நீச பலனுக்குரியதாக விருக்கும். உச்சம்-அதி உச்சம் ஆகிய இந்த எல்லைகளுடன் ஆறு ராசி—அல்லது பாகை நூற்று எண்பது கூட்ட முறையே நீசம்-அதிநீசம் என்னும் எல்லைகள் வரும்.

இந்த இடங்களில் நேர்முக பலனுக்குரிய துலாத்தில் மூலத்திரிகோண பலம் வாய்ந்த எல்லையுள் பலம் பொருந்த சிறந்த பலன்களும்—அதன்மேல் அந்த ராசியின் அந்தம் மட்டும் ஆட்சி பலனுக்குரிய தாகையால், சுக்கிரனின் இயலான பலன்கள் நேர்முகத்துள்ளதாகவு மிருக்கும். எதிர்மறைப் பலனுக்குரிய 'விருஷபம்' என்னும் இராசி சுக்ரனுக்கு மற்றொரு ஆட்சி இட மாகையால், அதில் அதன் ஆட்சி பல விசேஷம் எதிர் மறைப்பலங் கொண்டதாக நேரும். அதாவது 'விருஷப'—'துலாம்' என்னும் இராசிகள் இரண்டும் சுக்ரனுக்குரிய ஆட்சி வீடுகளாயினும், அவற்றுள் இரண்டும் முறையே எதிர்மறை—நேர்முக இயல்களில் பலமும்-பலனும் சுக்ரனுக்கு வாய்க்கின்றதெனக் கொள்ளல் வேண்டும்.

உச்ச ராசியில் (மீனத்தில்) அதி உச்ச எல்லை மட்டும் சுக்ரனுடைய பலன்கள் இக சித்திகளில் விசேஷ தாத்திலும் பாரார்த்தமான சித்திப்பேறுகளுக்கு அடிகோலிச் செல்வதாகவும்—அவ்வகையே மிக உன்னதம் கொண்டிருக்கும். மற்று, இதர எல்லையுள் ஸ்திதி பெற அதன் பலம் உச்சதாத்தில்-ஆனால், சாமான்ய கடையில் கெடுகிலும் நிகழும்.

இதே விதம் இந்த உச்ச ராசிக்கு நேர் ஏழாம் ராசியான 'கன்னி'யில் முதற்கண்ணுள்ள இருபத்தேழு பாகை அளவில் வரும் எல்லை "அதி நீச" மாது மாதலின், அதன்பலன் அதி உச்சத்திற்கு மாறாகவும்-இதர இடம் முழுவதும் உச்ச எல்லைக்குரிய சாதாரண பலன்களுக்கு நேர் எதிராகவும் கொள்ளவேண்டும்.

உச்ச—அதி உச்ச பலம் இக ஸித்திகளில் மிகவும் உன்னதங் கொண்டது; நீச. அதி நீச பலம் நேர் எதிரானது என்பர். ஆயினும், நீச-அதி நீசபலம் பொருள் எல்லையின் கண் வரும் ஸித்திகளில் தொடர்ந்த தோல்விகளை-துன்பங்களை-இன்னும் வேண்டாத தொல்லைகளை-தொடர்புகளையே கெடுகிலும் பலனுக்கி, பொருள் எல்லையின் அப்பாலாய எல்லைகள் யாவினும் எய்துதற்கரிய அபூர்வங்களின் ஸித்திகளுக்குத் தயாராக்குகின்றதென்பது இங்கு குறிப்பிடத் தக்கது.

இந்தப் பலன்களில் உதய லக்னத்திற்கு சுக்ரன் இடம் பெறும் எல்லையால் ஆதிபத்திய பலமும், அதன் உரிய ஸ்வக்ஷேத்திர எல்லைகளை அந்த உதய பாவத்தினின்றும் கணக்கிட்டு சுக்ரனின் 'ஆதிபத்திய பல'மும்,

சேர்க்கையில் வாய்க்கும் கோள்களின் பலங்களை அளவிட்டு 'சேர்க்கைபல மும், கொண்டு சுக்ரனுக்குரிய சரியான பலங்களைத் தெரிந்துகொள்ள வேண்டும்.

ஸ்திதிகளில் கேந்திரம் சுபபலம் வாய்ந்தது; ஆனால் ஆதிபத்திய பலன் மிகவும் தீயதாகும். கோணங்களிலும் தனலாபங்களிலும் சுக்ரனுக்கு ஸ்திதி பலம் வாய்த்தல் நன்மையாக விருக்கும். இந்த சுப ஸ்தானங்கள் நட்பு-ஆட்சி-உச்சங்களாக விருந்தால் மட்டும் அதன் நற்பலன்கள் பூரணமாக நிகழக்கூடிய தாகும்.

## பார்வைகள் (Aapects)

சாதாரணமாகக் கோள்கள் யாவினுக்கும் இயலாகவுள்ள ஸம ஸப்தமப் பார்வை (ஏழுக்கு ஏழாம் இராசி இடத்து நோக்கு) சுக்கிரனுக்கும் இருக்கிறது. இதைவிட எவ்வித விசேஷ பார்வையும் இது முன் நீங்கள் அறிந்திருக்கிற சேய்-குரு கிரகங்களைப் போன்று எதுவுமில்லை. எனவே, பார்வை பலன்களின் முக்கியம் இதற்கில்லை யென்று கூறலாம். ஆயினும் வானத்தே உதய-அஸ்தமன எல்லைகளில்—அதாவது சூரியனுக்கு மேற்பால் அல்லது கீழ்ப்பால் ஊருகையில் நேரும் பலம் பல நிகழ்ச்சி அம்சத்தில் முக்கியங் கொண்டிருக்கும். சூர்யனுக்குக் கீழ்ப்பால்—அஸ்தமன திக்கில் ஊருகையில் அபிவிருத்தி ஏற்றமும் மேற்பால்-உதய திசையில் ஊருகையில், இன்ப அனுபவங்களும் பலன்களாகக் கொள்ளவேண்டும். இந்த உண்மையை மேலைநாட்டு வானநூலார் தங்கள் ஆராய்ச்சியிற் காணுமுன்பே, பல ஆயிரம் ஆண்டுகள் முன்னம் மத்திய ஐரோப்பாவின் பழங்காலத்துக் குடிகள் இந்த விவரங்களைக் கண்டு, வழக்கில் அதை ஒட்டிய கொண்டாட்டங்களை அல்லது வழி பாடுகளை ஆற்றி வந்திருக்கின்றனர் என்று அறிகின்றோம்.

மேற்கிலுள்ள பல பாக நிபுணர்கள் எல்லாக் கிரகங்களுக்குமே பார்வை இடங்களைக் காணுகின்றனர். அவ்வழி சுக்ரனுக்கும் பார்வை இடங்களைப் பலவாகக் குறிக்கின்றனர். பல நிகழ்வில் அவர்கள கூறும் பார்வைக்குரிய எல்லைகள் அதிகம்—ஏன், கொஞ்சமும் உதவுவதாகவில்லை யென்று தெரிவதால், அதனை இங்கு கவனியாது விடுகின்றோம்.

ஸம ஸப்தமப் பார்வை எல்லாக் கிரகங்களுக்கும் இருப்பதால், அதற்கு விசேஷத்தைக் கூற முடியவில்லை. இந்த ஒன்றுதான் சுக்ரனுக்கு மிருத்தலின், பார்வை விசேஷங்களைக் கற்பித்துக் கொண்டிருக்க வேண்டுவதில்லை யென்றே அறிஞர் கருதுகின்றனர்.

இனி, சுக்ரனுடைய இதர பலன்களுக்கு மற்றுமுள்ள கொள்களின் இயலும் பலமும் கண்டுதான் கூறலாமாகையால் மேலேசு க்ரனை அடுத்து வரும் 'சனி' க் கிரகத்தின் விசேஷங்களைப் பற்றி அறிதல் அவசிய மாகும். பலன் தரும் கோள்கள் ஐந்தனுள்ளும் வரிசைக் கிரமத்திற்கு இறுதிக்கண் இருப்பது "சனிக் கிரகம்" இதைப்பற்றிய விவரங்களை அடுத்த இதழ் முதல் ஆராய்ந்து வருவோம்.

# நூதன மார்வாடி

(ஏ. ஆர். ராஜகோபாலன்.)

வீர:—அதைப்பற்றி நான் கவனித்துக் கொள்ளுகிறேன். உம்!" என்ருன்.

முகமூடியும் பதில் பேசாமல் அவ்விரு முரடர்களுக்கும் கட்டளையிட, உடனே அவர்கள் சிறையின் கதவைத் திறந்தார்கள். உடனே உள்ளிருந்தவர்களெல்லாம் சந்தோஷ ஆரவாரத்துடன் வெளியே வந்தார்கள்.

வீரமார்த்தாண்டன் அவர்களைப் பார்த்து, "நீங்கள் பின்பக்கமாகச் சென்று இவ்விடத்தை விட்டு வெளியேறுங்கள். நினைத்த விடங்களுக்கு நீங்கள் உடனே சீக்கிரம் போங்கள். ஏனெனில் நான் இப்பொழுது......"

வீரமார்த்தாண்டன் இப்பொழுது புருஷோத்தமனைக் கவனிக்கவில்லை. திடீரென்று பைத்தியம் பிடித்தவன்போல், புருஷோத்தமன் வீரமார்த்தாண்டனின் இரு கரங்களையும் கெட்டியாகப் பிடித்துக்கொண்டு, "உம், உம்! முகமூடியைக் கொல்லக்கூடாது, ஏனெனில் அது பலரை அடியோடு கெடுத்து விடும். அநேகர் அதன்மூலம் தங்கள் உயிரை இழப்பார்கள்"................என்று சொல்லியவண்ணம் பலமாகத் தொங்கினன்.

வீரமார்த்தார்த்தாண்டன் அவனை ஒரே உதருகத் தள்ளிவிட முயன்ருன். ஆனல் புருஷோத்தமன் அப்பொழுது பேய் பிடித்தவன்போ லிருந்தால் அவனை எளிதில் தள்ளிவிடவில்லை.

அடுத்த நிமிடம் இரண்டாம் கட்டிலிருந்து 7-8 முரட்டு மனிதர்கள் கைகளில் கத்திகளுடன் வந்து வீரமார்த்தாண்டனைச் சூழ்ந்துகொண்டு, அவன் கரங்களிலிருந்து பலவந்தமாக இரு துப்பாக்கிகளையும் பிடுங்கிக் கீழே யெறிந்தார்கள்.

இப்பொழுது புருஷோத்தமன் தன் கைப்பிடியை விட்டுவிட்டான். இப்பொழுது வீரமார்த்தாண்டன் மூன்று பக்கங்களிலும் முரட்டு மனிதர்களால் சூழப்பட்டான். நான்காவது பக்கத்தில் முகமூடி கம்பீரமாக நின்று கொண்டிருந்தான். அவன் கையில் ஒரு துப்பாக்கி இப்பொழுது பளபளவென்று மின்னிக் கொண்டிருந்தது.

முகமூடி முரடர்களைப் பார்த்து, "யாரும் வீரமார்த்தாண்டனைக் கொல்ல முயற்சி செய்யாதீர்கள். இப்பொழுது தான் சற்று நேரத்திற்கு முன்பு இறந்த நம்முடைய ஆளைப்போல இவனையும் அக்நெருப்புக் குழியில் போடவேண்டும். அப்படித் தப்பித்துக்கொள்ள முயற்சி செய்தால் முழங்காலின் கீழே சுடுங்கள். அது போதும்" என்று கட்டளை யிட்டான்.

வீரமார்த்தாண்டன் சற்றேனும் கலவரப்படாமல் தைரியமாக நிமிர்ந்து நின்று கொண்டிருந்தான். அவன் மனதில் இருக்கும் விஷயங்களை ஆராய்பவர்கள்போல எல்லோரும் அவனையே முறைத்துப் பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

இதையும் வீரமார்த்தாண்டன் 'நல்லதே' என்று கருதினன். ஏனெனில் சிறையிலிருந்து விடுபட்ட பெண்களெல்லாம், நாலாங்கட்டின் வழியாக வெளியேறிக் கொண்டிருந்தார்கள். 'அப்படித் தப்பித்துச் செல்வதை இவர்கள் கவனிக்கக்கூடாது' என்ற எண்ணத்துடன் அவர்களையே முறைத்துப் பார்த்துக் கொண்டிருந்தான். இவன் எதிர்பார்த்தபடி முரடர்களும் இவனுடைய ஒவ்வொரு அசைவையும் கவனமாகப் பார்த்துக் கொண்டிருந்தார்களே ஒழிய பின்புறம் திரும்பவேயில்லை.

கடைசி பெண் உருவமும் நாலங்கட்டிற்குப் போய்விட்டதும், வீரமார்த்தாண்டன் இப்பொழுது நிமிர்ந்து அலட்சியமாகச் சிரித்தான்!

ஆகா! எவ்வளவு கம்பீரமாகவும், பயங்கரமானதாகவும், அலட்சியகரமானதாகவும் இருந்தது, அச் சிரிப்பு!

முகமூடி:—"வீரமார்த்தாண்டரே! இன்னும் சிறிது நேரத்தில் நெருப்பில் வேகப்போகும், தாங்கள் ஏன் இப்படிச் சிரிக்கிறீர்கள்?" என்று கேட்டான். வீரமார்த்தாண்டன் தன் ஜேபியினின்றும் அப்பொழுது, சிகரெட் போன்ற வஸ்துவை மெதுவாக எடுத்தான். பிறகு,

வீர:—'வீரமார்த்தாண்டன் ஏன் சிரிக்கிறான்' என்று கேட்கிறீர்கள். இதோ சொல்லுகிறேன். வீரமார்த்தாண்டன், 'எப்பொழுதும் விரோதிகளின் கரத்தில் உயிருடன் சிக்குவதில்லை' என்ற விரதம் பூண்டிருக்கிறான். அதன்படி இப்பொழுது தற்கொலை செய்துகொள்ளப் போகிறான்."

இப்படிச் சொல்லிய வண்ணம் அந்தச் சிகரெட் போன்ற வஸ்துவைத், தூக்கிக் காண்பித்து, "ஆனல், இப்பொழுது, நீங்களும் வீரமார்த்தாண்டனுடன் இறக்கப் போகிறீர்கள்" என்றான்.

முகமூடியும், மற்றவர்களும் ஆச்சரியத்துடன் வீரமார்த்தாண்டனையே வியப்புடன் பார்த்துக்கொண் டிருந்தார்கள். ஒருவரும் வாய் திறக்கவில்லை, வீரமார்த்தாண்டன் தொடர்ந்து, "இதோ, என் கையிலிருக்கும் பொருள் நீங்கள் எண்ணுவதுபோல் சாதாரண சிகரெட்டல்ல. இதனுள் இரண்டு அறைகளாக மெல்லிய காகிதத்தின் மூலம் பிரிக்கப்பட்டிருக்கிறது. இரண்டு பாகத்திலும் இரசாயனப் பொருள்கள் இருக்கின்றன. ஒரு பாகத்தில் நைட்ரோஜன் அயோடைட் (Nitrogen iodide) என்னும் பொருளும், மற்றொரு பக்கத்தில் சுத்தமான ஆக்ஸிஜன் (Free oxygen) என்னும் பொருளும் இருக்கின்றன. இப்பொழுது இந்த சிகரெட் போன்ற வஸ்து என் கையிலிருந்து தவறி விழுந்தால், உடனே நடுவிலிருக்கும் காகித இணைப்பு விலக,—உடனே நைட்ரோஜன் அயோடைட், ஆக்ஸிஜனுடன் சேரும்."

இப்பொழுது சற்று பேச்சை நிறுத்தி சுற்றிலும் ஒருமுறை பார்த்து, பிறகு, "'இந்த இரண்டு இரஸாயனப் பொருள்களும் சேர்ந்துகொண்டால், அப்பொழுது என்ன நடக்கும்' என்று முகமூடி மனிதனிடத்தில் தெரிந்து கொள்ளுங்கள்" என்றான்.

உடனே எல்லா முரடர்களும் முகமூடியைப் பார்த்தார்கள். ஆனல் முகமூடி ஒன்றுமே பேசாமல் தன் கையிலிருந்த துப்பாக்கியை மெதுவாகக் கீழே போட்டு விட்டான்.

வீரமார்த்தாண்டன் மீண்டும், "என், நண்பர்களே! நீங்கள் துண்டந் துண்டமாகச், சிதற வேண்டுமென்ற எண்ணம் உங்களுக்கு இருந்தால், இப்பொழுது என்னைத் தடை செய்யுங்கள்," என்று சொல்லிய வண்ணம், அப் பயங்கர வஸ்துவை வலதுகையில் கட்டை விரலுக்கும் சுண்டு விரலுக்கு மிடையில் மிருதுவாகப் பிடித்தவண்ணம், இரண்டாங்கட்டு வாயிற்படியை நோக்கிச் சென்றான். இப்பொழுது அவனை ஒருவரும் தடை செய்யவில்லை.

நிமிஷமொன்று முகமூடி, "வீரமார்த்தாண்டரே, நீங்கள் சொல்லிய பொருள்கள் இரண்டும் அவ்வஸ்துவில் இருக்கிறதென்று பிரமாணம் செய் வீர்களா?" என்றான்.

வீரமார்த்தாண்டன் அழகாகப் புன்னகை செய்து, "முகமூடியே! நான் சொல்லுவதில் சந்தேகமிருந்தால், தாங்கள் என்னைத் தடை செய்து பாருங்கள். அப்பொழுது தன்னால் தெரிந்துவிடும்," என்று சொல்லிவிட்டுக் குனிந்து, கீழே விழுந்து கிடந்த இரு துப்பாக்கிகளையும் எடுத்து, ஒன்றைத் தன் சட்டைப்பையில் போட்டுக்கொண்டு மற்றொன்றை இடது கையில் தயாராகப் பிடித்தவண்ணம் பின்னோக்கிச் சென்றான்.

வாயிற்படியை யடைந்ததும் மீண்டும் திரும்பி, "மனோன்மணி! வா• சீக்கிரம். நாம் இங்கிருந்து வெளியேறவேண்டும்" என்று சொல்ல மனோன்மணி கிடுகிடுவென்று நடந்து வீரமார்த்தாண்டனை யடைந்தாள்.

அப்பொழுது வீரமார்த்தாண்டன், புருஷோத்தமனைப் பார்த்து, "புருஷோத்தமரே! தாங்களும் தயவு செய்து வெளியில் போய் விடலாம். இங்கிருந்து தப்பி எல்லா பெண்களும் பின்கட்டின் வழியாகச் சென்று விட்டார்கள். அவர்களினிடையில் உன் பிரிய சிநேகிதனாகிய ராமநாதனின் மனைவி உன் குழந்தையை வைத்துக் கொண்டிருக்கிறாள். நீ போய் உன் குழந்தையைப் பெற்றுக்கொண்டு 'சமூகப் பாவிகள்' என்ற நாடகத்தில் வந்த இலாபத்தை அவளுக்குக் கொடுக்க முயற்சி செய்வதுடன், ராமநாதனின் தற்கொலையால் வரும் இன்ஷியூரன்ஸ் பணத்தையும் அவளுக்குக் கொடுத்து, அவளிஷ்டப்பட்ட விடத்திற்கு அவளை யனுப்பு. உம்!" என்று கட்டளை யிட, புருஷோத்தமனும் உடனே நாலாங்கட்டின் வழியாய்ச் சென்று மறைந்து விட்டான்.

இப்பொழுது வீரமார்த்தாண்டன் தன் இடது கைத் துப்பாக்கியை முகமூடிக்கு நேராகப் பிடித்து, "முகமூடியே! தயவுசெய்து தங்கள் முக மூடியைக் கழட்டுங்கள். ஏனெனில் இவ்வளவு அபாரமான சாமர்த்தியத்துடன் காரியங்களைச் செய்த தங்களின் முகத்தை நான் பார்க்கவேண்டும்" என்றான்.

முகமூடி உடனே பதில் பேசாமல் தன் முகமூடியைத் தூக்க,

ஆ! என்ன, ஆச்சரியம்! அவ்விடத்தில் டாக்டர் மாசிலாமணி நின்று கொண்டிருந்தார். பிறகு உடனே தன் முகத்தை மீண்டும் மறைத்துக் கொண்டார். வீரமார்த்தாண்டன்:—பேஷ்! நான் நினைத்தது சரியாகப் போயிற்று. கடைசியில் நீங்களே இவ்வளவு காரியங்களையும் செய்திருக்கிறீர்கள். ராமநாதனுக்கும் உங்கள் மனைவிக்கும் கள்ள நட்

பேற்பட்டிருக்கிற தென்பதைத் தாங்கள் எப்படியோ கண்டு பிடித் திருக்கி றீர்கள். ஆகையால் ராமநாதனைப் பழிக்குப் பழி வாங்கினீர்கள்''

இவ்வாறு சொல்லிவிட்டு வீரமார்த்தாண்டன் அவர்களை அறையின் ஒரு கோடியில் நிற்கும்படிச் சொல்லி, அங்கு (இந்த) மூலையில் இருந்த டெலிபோனை யெடுத்து போலீஸ் ஸ்டேஷன் நம்பரைக் கூப்பிட்டான். அப்பொழுதும், அவன் முகமூடியின் மீதும் முரடர்களின் மீதும் இருந்த கண்களை யெடுக்கவில்லை.

சிறிது நேரத்தில் மணிபுரத்து, போலீஸ் ஸ்டேஷன் இன்ஸ்பெக்டர் பேசினர். அவரிடம் வீரமார்த்தாண்டன், "ஐயா! நான் சொல்வதை மட்டும், நீங்கள் கவனியுங்கள். குறுக்கே ஒன்றும் பேச வேண்டாம். நான் வீரமார்த்தாண்டன் பேசுகிறேன். சில நாட்களுக்கு முன்பு, அடிக் கடி தற்கொலைகள் நடந்துவந்த விஷயம் உங்களுக்குத் தெரிந்திருக்கலாம்—அல்லது நீங்கள் பேப்பர்களில் படித்திருக்கலாம். அக் கொலைகளின் காரணத்தைக் கண்டு பிடிப்பதற்காக முயன்று வந்த நான் இப்பொழுது கண்டு பிடித்து விட்டேன். கேவலமான ஸ்திதியி லிருக்கும் பொழுது அவர்களிடம் கொஞ்சம் பணம் கொடுத்து, பதிலுக்கு அவர்களின் இன்ஷியூரன்ஸ் பணத்திற்காகவும், அதிக லாபத்திற்காகவும், அவர்கள் தற்கொலை செய்து கொள்ளும்படியாக அவர்களிட மிருந்து கையெழுத் திட்ட காகிதத்தை வாங்கிக் கொண்டு, இதுகாறும், பயங்கர நாடகத்தை யாடி வந்த சூத்திரதாரியாகிய முகமூடி யென்னும் மனிதனைக் கண்டு பிடித்து விட்டேன். தவிர இங்கு வந்ததுமே அடைத்து வைக்கப் பட்டிருந்த தற்கொலை செய்து கொண்டவர்களின் மனைவிமார்களை மீட்டு வெளியே யனுப்பி விட்டேன். தவிர இன்னொரு அதிசயமான விஷயம் சொல்லவேண்டும். நேற்று இரவு மரண மடைந்ததாகக் கூறப்படுமீ அரச கேசரியும், அவரது மனைவியான மனோன்மணியும் இவ்விடம் சிறை செய் யப்பட்டுக் கிடந்தனர். இதிலிருந்து, அரசகேசரியின் வேஷத்தில் யாரோ அங்கு—அரசகேசரியின் மாளிகையில்—மரண மடைந்திருக்க வேண்டு மென்றும், அரசகேசரியையும், மனோன்மணியையும், முகமூடி யென்பவனே இங்கு சிறை செய்திருக்க வேண்டுமென்றும் நினைத்தேன். பிறகு அவ் வரச கேசரி தம்பதிகளையும் மீட்டு, அவர்களை இங்கிருந்து தப்பிப் போகச் செய்து விட்டேன்............

இவ்வளவு விஷயங்களும் இவ் வூர்த் தோப்பைச் சேர்ந்த மர்ம வீட்டில் நடைபெற் றிருக்கின்றன. நீங்கள் மேலே உங்களால் ஆகவேண்டிய காரி யத்தைப் பாருங்கள். தவிர, நான் உங்களுக்கு முகமூடியென்னும் மனிதன் யார் என்பதைத் தெரிவிக்க............''

இப்பொழுது சடேரென்று முகமூடி மனிதன், "நண்பர்களே! வீரமார்த்தாண்டனைப் பிடியுங்கள். என்ன நடந்தாலும் சரி. உம்,'' என்று பலமாகக் கட்டளை யிட்டான்.

உடனே எல்லா முரடர்களும் வீரமார்த்தாண்டனின் பேரில் கத்தி களை ஓங்கிக்கொண்டு ஒருங்கே பாய்ந்தனர். வீரமார்த்தாண்டன் டெலிபோனில் பேச ஆரம்பிக்கும் பொழுது அவர்களை (முரடர்களையும்,

முகமூடியையும்) அறையின் மூலையில் நிற்கவைத்துத் தான் இந்த மூலையில் நின்றுகொண்டு பேசினுைதலால், இப்படி முகமூடி கூக்குரலிட்ட வுடனேயே சடேரென்று டெலிபோனை அப்படியே போட்டுவிட்டு, மனோன் மணியை யழைத்துக்கொண்டு இரண்டாங்கட்டு வாயிற் படியண்டை போய் நின்று, தன்னை நோக்கிப் பாய்ந்த கும்பலின் மீது அச் சிகரெட் போன்ற வஸ்துவைத் தூக்கி யெறிந்துவிட்டு, அதைத் திரும்பிக்கூடப் பார்க்காமல் மனோன்மணியை இழுத்துக்கொண்டு முதற்கட்டை நோக்கி யோடினுன்.

சிறிது தூரம் போவதற்குள் படே ரென்ற பலத்த ஓசை கேட்டது. மூன்றும் கட்டு அப்படியே பட படவென்று இடிந்து விழுந்தது. அதனிடையில் சிக்கிய அனைவரும் மாண்டனர்...........

இரண்டாம் கட்டும் அதிர்ச்சியால் அசைந்தாலும் வீரமார்த்தாண்டன் அதற்குள் வெகுதூரம் போய் விட்டானுகையால், அவனும் மனோன் மணியும் காப்பாற்றப்பட்டனர்.

வெகு சீக்கிரத்தில் வெளியே வந்த வீரமார்த்தாண்டன் தன் அங்கியையும் முகமூடியையும் சீக்கிரமாகக் கழற்றிவிட்டு சீக்கிரத்தில் கருணுகரனுக மாறினுன். உடனே அவனும் மனோன்மணியும் பாஸ்கர விலாஸை நோக்கித் துரிதமாக நடந்தனர்.

சீக்கிரமாக பாஸ்கர விலாஸின் வாயிலை யடைந்த கருணுகரன் தன் கைக் கெடியாரத்தை நோக்க அப்பொழுது இரவு மணி சரியாகப் பத்தரை யாயிருந்தது.

மணிபுரத்தி லிருந்து 11-மணிக்கு, ரயில் வண்டி யொன்றிருந்ததால், உடனே மனோன்மணியைக் கீழே நிறுத்தி வைத்துவிட்டு, தான் நேராகத் தன் ரூமிற்குச் சென்று, தன் சாமானுகிய ஒரே மூட்டையைத் தூக்கிக் கொண்டு, கீழே இறங்கினுன்.

அப்பொழுது எதிரில் வந்த ஓட்டல் மானேஜரிடம் தான் போகப் போவதாகக் கூறி ஒரு பத்து ரூபாய் நோட்டை அவர் கையில் கொடுத்து விட்டுப் பதில் பேசாமல் வெளியே வந்தான்.

அப்பொழுதும், பாஸ்கர விலாஸின் எதிரில் அன்று சாயங்காலம் கருணுகரன் வாடகைக்கு அமர்த்திக்கொண்ட டாக்ஸி காத்துக்கொண் டிருந்தது. உடனே மனோன்மணியை யழைத்துக் கொண்டு டாக்ஸியில் அமர்ந்து, ரயில்வே ஸ்டேஷனுக்கு ஓட்டுமாறு கட்டளை யிட்டான்.

உடனே கார் பறந்து சென்று ரயில்வே ஸ்டேஷனைச் சில நிமிடங் களில் அடைந்தது. உடனே கருணுகரன் தன் பையிலிருந்து ஒரு 100-ரூபாய் நோட்டை யெடுத்து, டாக்ஸி டிரைவரிடத்தில் கொடுத்து விட்டு ஸ்டேஷனின் உள்ளே சென்றுன் மனோன்மணியுடன்.

* * * *

11-மணிக்குப் புறப்பட்ட ரயில் வண்டியின் முதல் வகுப்பில் உட் கார்ந்திருந்தனர் அரசகேசரியும், மனோன்மணியும். இப்பொழுது அரச

கேசரி, தன்னுடைய கருணாகரன் வேஷத்தைக் களைந்து விட்டுத், தன் போலி மேக்கப்பையும் அழித்துக்கொண்டு விட்டார்.

சற்றுநேரம் சென்ற பிறகு, அரசகேசரி, தான் அங்கிருந்து புறப்பட்டு மணிபுரம் வந்து சேர்ந்தது முதல் நடந்த செய்கைகளையெல்லாம் ஒன்று விடாமல் கூறினார். அவைகளை யெல்லாம் ஆச்சரியத்துடன் கேட்ட மனோன்மணி, "ஆம்! முகமூடி மனிதன் வேஷத்தில் நாம் டாக்டர் மாசிலாமணியைக் கண்டோம். ஆனால் உங்களுக்கு வந்த தந்தி யொன்றில், "டாக்டர் மாசிலாமணி தற்கொலை செய்துகொண்டு விடுவார்போ லிருக்கிறது," என்று சந்தேகப்படுவதாக, அவருடைய மனைவியான சரோஜா உங்களுக்கு எழுதி யிருந்ததாகச் சீனு, சொன்னானே!" என்றான்.

அரச:—ஆம்! ராமநாதனுக்கும், சரோஜாவிற்கும் ஒரு காலத்தில் கள்ள நட்பு ஏற்பட்டதுபோ லிருக்கிறது. அதைக் கண்டுபிடித்த டாக்டர் மாசிலாமணி, 'பிறருக்குத் தன் மீது சந்தேகம் தோன்றக் கூடாது' என்ற எண்ணத்துடன் தானே தற்கொலை செய்து கொள்வது போல அபிநயித்தார். அவ்வளவுதான்............

சற்றுநேரங் கழிந்து, "இனி மணிபுரத்து இன்ஸ்பெக்டர் பாக்கி விஷயங்களைக் கவனித்துக் கொள்வார். அரசகேசரி மீண்டும் தோன்றுவதிலும்—அவர் இறந்ததாகக் கருதும் ஜனங்கள்—சந்தேக கொள்ளம் மாட்டார்கள். இனி சச்சிதானந்தமும் தற்கொலைகளின் மூலம் கஷ்டமடைய மாட்டார். நாளைப் பத்திரிகைகளில் 'வீரமார்த்தாண்டனின் தீரச் செயல்கள்' என்ற தலைப்பின் கீழ் எல்லா விஷயங்களும் வெளிவரும்படி ஷை இன்ஸ்பெக்டர் பார்த்துக் கொள்வார். நாம் இப்பொழுது சீனுவைச் சீக்கிரம் கண்டு, அவனிடம் ஆதியோடந்தமாக விஷயங்களைக் கூறவேண்டும். ஏனெனில் அவன் கவலையோ டிருப்பான்," என்றான். அப்பொழுது, மனோன்மணி அரசகேசரியைப் பார்த்து, "அன்பரே! ஏன் உலகத்தில் முக மூடியைப் போன்ற துஷ்டர்கள் தோன்றி இப்படிப்பட்ட காரியங்களைச் செய்கிறார்கள்?" என்று கேட்டாள்.

"ஏனென்றால்"— இப்பொழுது அரசகேசரி மனோன்மணியைத் தன்னிடம் இழுத்து மிருதுவாக அணைத்துக் கொண்டு, "மணி! வீரமார்த்தாண்டன் தோன்றுவதற்காகவும்,—அக்கிரமம் செய்பவர்களுக்குப் பய மேற்படுத்தவும்—இப்படிக் காரியங்கள் நடக்கின்றன", என்று சொல்லிய வண்ணம், அவளுடைய செவ்விய அதரங்களில் முத்தமிட்டார் அரசகேசரி.

முற்றிற்று.



# சித்திரபானு௵ கார்த்திகைமீ நவக்கிரக
# நிராயன சுத்த ஸ்புடம்

(இந்தியா ஸ்டாண்டர்ட் கடியார மணி-சென்னை காலை 7-மணிக்கு)

| தேதி | நக்ஷத்திர ஹோரை | | | சூரியன் | | சந்திரன் | | அங்காரகன் | | புதன் | | குரு | | சுக்கிரன் | | சனி | | ராகு | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | ம | நி | ச | பா | க | பா | க | பா | க | பா | க | பா | க | பா | க | பா | க | பா | க |
| 1 | 3 | 07 | 42 | 209 | 51 | 307 | 27 | 196 | 02 | 199 | 30 | 90 | 49 | 209 | 37 | 47 | 37 | 126 | 28 |
| 2 | 3 | 41 | 38 | 210 | 52 | 321 | 14 | 196 | 42 | 201 | 03 | 90 | 47 | 210 | 51 | 47 | 32 | 126 | 25 |
| 3 | 3 | 45 | 35 | 211 | 53 | 335 | 02 | 197 | 22 | 202 | 37 | 90 | 45 | 212 | 06 | 47 | 27 | 126 | 22 |
| 4 | 3 | 49 | 31 | 212 | 54 | 348 | 20 | 198 | 03 | 204 | 13 | 90 | 42 | 213 | 20 | 47 | 22 | 126 | 19 |
| 5 | 3 | 53 | 28 | 213 | 55 | 1 | 38 | 198 | 41 | 205 | 50 | 90 | 40 | 214 | 35 | 47 | 17 | 126 | 16 |
| 6 | 3 | 57 | 24 | 214 | 55 | 14 | 23 | 199 | 21 | 207 | 29 | 90 | 37 | 215 | 49 | 47 | 12 | 126 | 13 |
| 7 | 4 | 01 | 21 | 215 | 56 | 27 | 09 | 200 | 01 | 209 | 09 | 90 | 34 | 217 | 03 | 47 | 07 | 126 | 10 |
| 8 | 4 | 05 | 17 | 216 | 57 | 39 | 34 | 200 | 41 | 210 | 48 | 90 | 31 | 218 | 17 | 47 | 03 | 126 | 07 |
| 9 | 4 | 09 | 14 | 217 | 58 | 51 | 59 | 201 | 21 | 212 | 28 | 90 | 28 | 219 | 31 | 46 | 58 | 126 | 04 |
| 10 | 4 | 13 | 10 | 218 | 59 | 64 | 04 | 202 | 01 | 214 | 07 | 90 | 25 | 220 | 45 | 46 | 54 | 126 | 01 |
| 11 | 4 | 17 | 07 | 219 | 59 | 76 | 10 | 202 | 41 | 215 | 47 | 90 | 22 | 221 | 59 | 46 | 59 | 125 | 57 |
| 12 | 4 | 21 | 03 | 221 | 01 | 87 | 45 | 203 | 21 | 217 | 26 | 90 | 19 | 223 | 13 | 46 | 45 | 125 | 54 |
| 13 | 4 | 25 | 00 | 222 | 02 | 99 | 21 | 204 | 01 | 219 | 06 | 90 | 16 | 224 | 27 | 46 | 39 | 125 | 51 |
| 14 | 4 | 28 | 56 | 223 | 03 | 112 | 03 | 204 | 41 | 220 | 46 | 90 | 12 | 225 | 41 | 46 | 34 | 125 | 48 |
| 15 | 4 | 32 | 53 | 224 | 04 | 124 | 45 | 205 | 21 | 222 | 27 | 90 | 08 | 226 | 57 | 46 | 28 | 125 | 45 |
| 16 | 4 | 36 | 49 | 225 | 05 | 137 | 55 | 206 | 01 | 224 | 08 | 90 | 04 | 228 | 10 | 46 | 23 | 125 | 42 |
| 17 | 4 | 40 | 46 | 226 | 06 | 151 | 06 | 206 | 41 | 225 | 50 | 90 | 00 | 229 | 25 | 46 | 17 | 125 | 38 |
| 18 | 4 | 44 | 43 | 227 | 07 | 163 | 39 | 207 | 21 | 227 | 34 | 89 | 56 | 230 | 39 | 46 | 12 | 125 | 35 |
| 19 | 4 | 48 | 40 | 228 | 08 | 176 | 13 | 208 | 01 | 229 | 19 | 89 | 62 | 231 | 54 | 46 | 06 | 125 | 32 |
| 20 | 4 | 52 | 36 | 229 | 10 | 189 | 52 | 208 | 40 | 230 | 57 | 89 | 48 | 235 | 08 | 46 | 01 | 125 | 29 |
| 21 | 4 | 56 | 33 | 230 | 11 | 203 | 31 | 209 | 20 | 232 | 35 | 89 | 44 | 234 | 23 | 45 | 55 | 125 | 25 |
| 22 | 5 | 00 | 29 | 231 | 12 | 217 | 59 | 210 | 00 | 234 | 15 | 89 | 40 | 235 | 37 | 45 | 50 | 125 | 22 |
| 23 | 5 | 04 | 26 | 232 | 13 | 232 | 27 | 210 | 40 | 235 | 55 | 89 | 36 | 236 | 51 | 45 | 44 | 125 | 19 |
| 24 | 5 | 08 | 22 | 233 | 14 | 246 | 20 | 211 | 19 | 237 | 34 | 89 | 32 | 238 | 01 | 45 | 39 | 125 | 16 |
| 25 | 5 | 12 | 19 | 234 | 15 | 260 | 13 | 211 | 59 | 239 | 14 | 89 | 25 | 239 | 12 | 45 | 33 | 125 | 12 |
| 26 | 5 | 16 | 15 | 235 | 17 | 272 | 59 | 212 | 39 | 240 | 53 | 89 | 19 | 240 | 25 | 45 | 29 | 125 | 09 |
| 27 | 5 | 20 | 12 | 236 | 18 | 285 | 45 | 213 | 19 | 242 | 32 | 89 | 12 | 241 | 39 | 45 | 25 | 125 | 06 |
| 28 | 5 | 24 | 08 | 237 | 20 | 301 | 19 | 213 | 59 | 244 | 11 | 89 | 06 | 242 | 52 | 45 | 21 | 125 | 03 |
| 29 | 5 | 28 | 05 | 238 | 21 | 316 | 53 | 214 | 39 | 245 | 50 | 89 | 59 | 244 | 05 | 45 | 17 | 124 | 59 |
| 30 | 5 | 32 | 01 | 239 | 22 | 330 | 36 | 215 | 19 | 247 | 26 | 89 | 53 | 245 | 18 | 45 | 13 | 124 | 56 |

## ஆகாயக் காட்சி.

**பானு மத்தியம்:**—இம்மாதம் 2உ முதல் 13உ வரை சூரியன் புத-சுக்ரர்களுக்கு நடுவே சஞ்சாரம்.

**சமாகமம்:**—இம்மாதம் 8உ முன் இரவு மணி 7 நிமிஷம் 50-க்கு வடக்கு பாகை 3-ல் சசி-சனி.

# " ஆனந்தபோதினி " பஞ்சாங்கம்.

சித்திரபானுஸு கார்த்திகைமீ—கலியுகாதி 5044, சாலிவாகனம் 1865,
பசலி 1352, கொல்லமாண்டு 1118, ஹிஜரா 1361,
இங்கிலீஷ் 1942ஸு நவம்பர்மீ—டிஸம்பர்மீ

| கார்த்திகை | நவம்பர்மீ | வாரம். | திதி. | நக்ஷத்திரம் | யோகம். | விசேஷங்கள். |
|---|---|---|---|---|---|---|
| 1 | 16 | திங் | நவ49-12 | சத55-12 | சி55-12ம | விருச்சிகரவி கா-16-42 |
| 2 | 17 | செவ் | தச45-35 | பூர53-25 | ம53-25அ | சத்தியவார தீர்த்தம் |
| 3 | 18 | புத | ஏகா43-48 | உட்52-47 | சி52-47ம | சர்வ ஏகாதசி, போதயன ஏகாதசி |
| 4 | 19 | வியா | து42-36 | ரே53-24 | சி53-24அ | யோகீஸ்வர துவாதசி |
| 5 | 20 | வெள் | திர42-35 | அசு55-48 | அ55-48சி | வியாதியஸ்தர் குளிக்க |
| 6 | 21 | சனி | சது44-24 | பர58-47 | சி58-47அ | பரணி தீபம் |
| 7 | 22 | ஞா | ○46-47 | கி❊60-0 | சித்60 | ○ கிருத்திகை விரதம் |
| 8 | 23 | திங் | பிர50-25 | கிரு2-24 | ம2-24அ | விதை விதைக்க |
| 9 | 24 | செவ் | துதி54-36 | ரோ7-47 | அ7-47சி | மருந்துண்ண |
| 10 | 25 | புத | திரு60-0 | மிரு13-48 | சித்60 | |
| 11 | 26 | வியா | திரு0-2 | திரு20-25 | ம20-25அ | |
| 12 | 27 | வெள் | சது5-24 | புன27-0 | சி27-0ம | |
| 13 | 28 | சனி | பஞ்10-11 | பூச33-1 | சி33-1ம | |
| 14 | 29 | ஞா | சஷ்15-11 | ஆயி38-25 | சி38-25ம | |
| 15 | 30 | திங் | சப்18-36 | மக42-36 | ம42-36சி | |
| 16 | 1 | செவ் | அ21-0 | பூர45-35 | சி45-35அ | |
| 17 | 2 | புத | நவ22-12 | உத்48-1 | அமி60 | |
| 18 | 3 | வியா | தச21-36 | அஸ்48-37 | சித்60 | வியாதியஸ்தர் குளிக்க |
| 19 | 4 | வெள் | ஏகா20-23 | சித்48-0 | சித்60 | சர்வ ஏகாதசி |
| 20 | 5 | சனி | து17-25 | சுவா46-12 | அ46-12சி | மருந்துண்ண, வீடு கட்டல், கிரகப்பிரவேசம் |
| 21 | 6 | ஞா | திர13-48 | வி43-47 | மர60 | மாச சிவராத்திரி |
| 22 | 7 | திங் | ச ●9-35 | அ40-48 | சித்60 | சர்வத்திர அமாவாசை |
| 23 | 8 | செவ் | அமா4-48 பிர59-24 | கே37-11 | ம37-11அ | அவமாகம், மார்க்கசிர சுத்தம் |
| 24 | 9 | புதன் | துதி53-25 | மூல33-1 | ம33-1அ | சந்திர தரிசனம் |
| 25 | 10 | வியா | திரு47-23 | பூரா28-48 | சித்60 | குளம் கிணறுவெட்ட |
| 26 | 11 | வெள் | சது41-25 | உத்25-13 | சி25-13ம | மாச சதுர்த்தி |
| 27 | 12 | சனி | பஞ்36-1 | திரு21-35 | சித்60 | வியாதியஸ்தர் குளிக்க |
| 28 | 13 | ஞா | சஷ்31-13 | அ18-1 | ம18-1சி | சம்பாசஷ்டி [தைக்க |
| 29 | 14 | திங் | சப்27-0 | சத15-2 | சி15-2ம | மருந்துண்ண, விதை வி |
| 30 | 15 | செ | அஷ்23-25 | பூர13-13 | ம13-13அ | தனுர் ரவி கா-47-6, மூலம் 1-ல் ரவி |

(1942 டிஸம்பர்மீ)

| | | சனி | |
|---|---|---|---|
| கே | 7-விரு-புத<br>16-மித-குரு<br>22-விரு-அங்<br>25-த-பு-த-சு | | குரு |
| | | | ராகு |
| | சூரி | அங்கார<br>புத-சுக் | |

EDITED, PRINTED & PUBLISHED BY N. MUNISAWMY MUDALIAR,
AT THE " ANANDA BODHINI " PRESS,
No. 6, LAWYER CHINNATHAMBI MUDALI STREET, MADRAS.

## பூவுலக வாழ்க்கைக்கு இன்றியமையாத சிங்கபலத்தைத் தருவதேது?

முறையாய்ச் செய்த அயக்காந்த செந்தூரத்தைக்காட்டிலும் தேகபலத்தைத் தரும் ஔடதம் வேறொன்றுமில்லை.




**விளம்பரம்.** இதைக் கண்ணுறும் கனவான்களே! இந்த லேகிய செந்தூரங்கள் சாமான்யமானவையல்ல. அபாரமான பலத்தைத் தரக்கூடிய சக்தி அமைந்துள்ளவை. உறுதியாய் இவற்றை நம்பி வாங்கிச் சாப்பிட்டால் ஒரு தடவையிலேயே இவற்றின் குணம் நன்கு விளங்கும்.

இந்த லேகிய செந்தூரங்களால் நிவர்த்தியாகும் முக்கிய வியாதிகளாவன :—

தற்காலத்தில் மனிதரின் பால்ய சேஷ்டையாலும், இரத்தப் போக்காலும் அவருக்கு உண்டான 20 வகை மேகரோகங்கள், சூலைரோகம், குன்மரோகம், பித்தபாண்டு, கை கால் முடக்கு, ஓடுவாய்வு, பித்த வெப்பம், நெஞ்சு தொண்டை எரிச்சல், வயிற்றுப்பிசம் அஜீரணம், பசியில்லாமை, தாது ஹீனம், தேக உளைச்சல், கண்ணில் நீர்வடிதல், சோம்பல், நித்திரையில்லாமை, தலை சுழற்றல், நீர் இறங்கும்போது பொறுக்கமுடியாத பாதையைத் தரும் நீர்மேகம் முதலியவைகள் ஆச்சரியப்படத்தக்க விதமாய் நீங்கிவிடும். பயங்கரமான மேக சம்பந்த வியாதிகளைப் பத்தே வேளையில் போக்கி சப்த நரம்புகளுக்கும் முறுக்கேற்றி அபரிமிதமான இரத்த விருத்தியைப் பெருக்கி பலத்தைத் தருவதில் இதற்குமிஞ்சின இலேகிய பஸ்பம் வேறொன்றுமில்லை என்று நாம் உறுதியாகச் சொல்லுவோம். இதல்லாமல் தேகத்தைப் புஷ்டியாக்கித் தேகத்தடிப்பு நகக்கண் வெளுத்திருத்தல் முதலிய வியாதி

களைக் கண்டித்து தினந்தோறும் மலத்தை தாராளமாய்ப் போக்குவதில் இந்தலேகிய செந்தூரங்களே முதன்மையானதுவென்பதை நாம் எமது அனுபவத்தில் கண்டிருக்கிறோம். நிற்க இந்த லேகிய செந்தூரங்கள், மேற்கண்ட வியாதிகளைக் கண்டிப்பாய் நிவர்த்திக்குமா என்னும் சந்தேகமுடையோர் பரீக்ஷார்த்தமாக முதலில் 48-நாளாவது வாங்கி யுண்டால் இவற்றின் அபார குணம் தெரியவரும். தவிர யாங்கள் இம்மகத்துவம் பொருந்திய லேகிய செந்தூரங்களை எவ்வளவு சிறப்பித்துக் கூறியபோதிலும் அது தகும். மேலும் இவற்றை நோய் உள்ளவரே தான் சாப்பிடவேண்டும் என்ற அவசியமில்லை; யாவரும் சாப்பிடலாம். நோய் உள்ளவர்களைவிட நோய் இல்லாதவர்கள் எண்ணிக்கையாக 48-நாள் இந்த லேகிய செந்தூரங்களை யாதும் பத்தியமின்றிச் சாப்பிட அவர்க்கு நல்ல பலம் ஏற்படும். இது தவறாது. இவற்றைத் தருவித்து நண்பர் எண்ணிக்கையாகச் சாப்பிட்டு 10-நாளைக்குள் குணம் இல்லாவிடில் உடனே தெரியப்படுத்தினால் கட்டாயம் இவற்றிற்கு வாங்கிய பணம் வாப்ஸ் செய்யப்படும். தவிர மேற்காட்டிய நோய்கள் உடையோர் 48-நாட்கள் சாப்பிடுவார்களேயானால் அவை முழுதும் நீங்கிவிடும். அப்படி நீங்கிக் குணம் ஏற்படாவிடில் நாங்கள் அதற்கு உத்தரவாதிகளாவோம். யாங்கள் இவ்வளவு அருமையான லேகிய செந்தூரங்களை எவ்வளவோ சிரத்தையுடன் கஷ்டப்பட்டு முடித்துப் பரோபகார்த்தமாக வெளியிட்டோம். இவ்வருமை வாய்ந்த லேகிய செந்தூரங்களுக்குப் பொன்மெடல், வெள்ளிமெடல், பெற்றதல்லாமல் ஆயிரக்கணக்கான யோக்கியதாம்ச பத்திரங்களும் பெற்றிருக்கின்றோம். ஆதலின் நமது லேகிய செந்தூரங்கள் நாம் சொன்னபடி குணத்தைக் கொடுக்கும் என்பதைப்பற்றி ஜவாப்தாரியாக யிருக்கக் காத்துக் கொண்டிருக்கிறோம்; இது உண்ம. இவற்றை ஒரேதரம் தருவித்துப் பாருங்கள்; எமது உண்மை விளங்கும்.

வாதாதிக்க தோஷத்தினாலாவது, துராப்பியாசத்தினாலாவது, அதிக மனக்கவலையினாலாவது, அடிக்கடி உண்டாகும் நோயினாலாவது, மற்றெந்த காரணத்தினாலாவது பலமிழந்தவர்கள் எண்ணிக்கையாக ஷை லேகிய செந்தூரங்களைப் புசிப்பார்களானால் இவை தேகாரோக்கியம், வலிமை, அழகு முதலியவற்றை அவர்க்குக் கொடுத்து அவர்களைச் சந்தோஷிக்கச் செய்யுமென்பதில் தடையில்லை. வெளியூர்க் கனவான்கள் இந்த லேகிய செந்தூரங்களில் முழு நம்பிக்கை வைத்து ஒரே ஒருதரம் இவற்றைப் பரீக்ஷிப்பார்களானால், அவர்கள் அவசியம் ஆனந்தமடைவார்கள்.

இந்த லேகிய செந்தூரங்களுக்குப் பத்தியமே கிடையாது. எந்தப் பலகாரங்களையும் நீக்குதலின்றி சாப்பிடலாம். மருந்து சாப்பிடும்போது பசி அதிகமாய் எடுக்கும் ஆதலால் பச்சைப்பயற்றுக் குழம்பு, கறி, மார்க்கண்ட ரூப்பு, இவைகளை அதிகமாகப் பசியைத் தணிக்கக்கூடிய விதமாகத் தாமதம் செய்யாமல் சாப்பிடல் வேண்டியது. இவற்றைப் புசிக்கும் போதெல்லாம் பலகாராதிகள் சாப்பிடல் வேண்டும். தயிர், பால் முதலியவைகள் எவைகளாயிருந்தாலும் சந்தேகமின்றி சாப்பிட்டு வரலாம்.

இவ்வருமை வாய்ந்த லேகிய செந்தூரங்களை மட்டும் ஒருவர் தருவித்து எண்ணிக்கையாக 48-நாள் சாப்பிடுவாரேயானால் இவை தேகத்தில் ஊற ஊற, மேகமெல்லாம் சூரியனைக்கண்ட பனிபோல் நீங்கி அவர் தேகமானது வலுத்துப் புதிய ரத்தம் பாவி தன் வாழ்நாள் பரியந்தம் இளைக்காமலிருக்கும். இவற்றைப் புருஷன் பெண்சாதி இருவரும் ஏககாலத்தில் ஒற்றுமையாய்ச் சாப்பிட்டு வந்தார்களேயானால், அவர்க்கு உதிக்கும் மக்கள் மிகுந்த

தேஜஸோடு தோன்றுவார்கள். இது உண்மை. இதை அதிகம் எழுதுதல் அனாவசியம். இந்தியா, ஸிலோன் ஆகிய உள் நாடுகளுக்கு 24-நாள் சாப்பிடக்கூடிய லேகியமும் செந்தூரமும் விலை ரூ. 1-12-0. போஸ்டேஜ் அணா 8. ஒரே தடவை 48-நாள் மருந்து வாங்குவோர்க்கு போஸ்டேஜ் உள்பட ரூ.4.

பர்மா, பினாங்கு, சிங்கப்பூர், செட்டால் முதலிய அயல்நாடுகளுக்கு 24 நாள் சாப்பிடக்கூடிய மருந்து விலை ரூ. 1-12-0. தபாற்கூலி ரூ. 1-4-0.

48-நாள் மருந்து வாங்குவோருக்கு போஸ்டேஜ் உள்பட ரூபா 5-8-0 சிங்கப்பூர், பினாங்கு, மலாக்கா முதலிய வெளிநாடுகளுக்கு வி. பி. ஆர்டர் இருந்தாலும் முன்பணம் அனுப்பாதவர்களுக்கு மருந்து அனுப்பப்படமாட்டாது.

## விலாசம்:—லேகியம் டிபோ,

## நெ. 6, வெங்கடேச மேஸ்திரி தெரு, மதராஸ்.

---

# நரை மயிர் கருக்குந் தைலம்



தற்காலத்தில் பலவிதமாகச் செய்து விற்கப்பட்டு வருகிற கப்புகள் மயிரைச் செம்பட்டையாகவும், பசுமை நிறமாகவும், சாம்பல் வர்ணமாகவும் ஆக்கி விகாரப்படுத்தி விடுகின்றன. நமது தைலமோ நரைத்த மயிருக்குப் பூசிய 3 நிமிஷத்திற்குள்ளாக நரைப்பதற்கு முன்பிருந்த கருமை நிறத்தையும் பளபளப்பையும் உண்டுபண்ணும். மேலே கூறியுள்ள விகார குணங்கள் இதில் உண்டாகமாட்டா. இதைப் பூசிய பிறகு முகலட்சணமும் வசிகரமு முண்டாகிறபடியால் வயோதிகரும் வாலிபரைப்போல் தோற்றப்படுவார்கள். இதை உபயோகிக்கும் விதம் பார்சலோடு தெரிவிக்கப்படும். இதன் விலை ரூபா 1.

## கர்ணபிந்து



காதில் சீழ் வடிதல், காது குத்தல், காது கேளாதிருத்தல், காதில் நமைச்சல் முதலிய வியாதிகளுக்கு இந்த மருந்தில் 2-துளி காலை மாலைகளில் காதில் விட்டுவர, காதிலுள்ள நோய்களெல்லாம் நீங்கிவிடும். புட்டி 1-க்கு அணா 4. வி. பி. தபால்கூலி வேறு.

## (காட்லீவர் ஆயில்) மீன் எண்ணெய்

இது பலத்தை உண்டாக்குகிறது. தவிர இரும்பலினால் உண்டாகும் இளைப்பையும் அடக்கும். இளைத்தவர்கள் உபயோகித்தால் தேகம் புஷ்டியாகும், இரத்தத்தைச் சுத்தி செய்யும், சுவாசகாசங்களின் ரோகத்தை குணப்படுத்தும், சரீரத்தினுடைய ஒவ்வொரு பாகத்துக்கும் பலத்தைக் கொடுக்கும். இதைக் குழந்தைகளுக்கும் கொடுக்கலாம். புட்டி 1-க்கு விலை ரூபா 1—8—0.

---

தனலட்சுமி கம்பெனி, 6, லாயர் சின்னதம்பி முதலி தெரு, மதராஸ்

# நாராயண சஞ்சீவித் தைலம்

இத்தைலம் முழுவதும் பச்சிலைகளாலும், பசும்பால் முதலிய சிரேஷ்டமான வஸ்துக்களாலும் ஆயுர்வேத முறைப்படி மிகப் பரிசுத்தமாகத் தயார் செய்யப்பட்டது. இத்தைலத்தில் ஸ்நானம் செய்வதினால் தலைவலி, ஒற்றைத் தலைவலி, மண்டையிடி, மண்டைக்குத்தல், கண் எரிச்சல், கண்களில் நீர் வடிதல், சாலேஸ்வரம், காதுநோய், தலைபாரம், அதிக வெய்யிலினால் உண்டாகும் சிரரோகங்கள், சரீரதாபம், மூளைக்கொதிப்பு முதலியவைகள் ஆச்சரியப்படும் விதமாய்த்தீரும். தொடர்ச்சியாய்ச் செய்துவரும் இதன் ஸ்நானங்களினால் நரைத்த மயிர் கருத்துவிடும். மூளையைக் குளிரப்பண்ணி அறிவையும் திடச் சித்தத்தையும் உற்சாகத்தையும் உண்டு பண்ணுவதில் இது நிகரற்றது. சாராய சத்து முதலிய ஆங்கில வாசனைகள் இதில் சேர்க்கப்படவில்லை. சுத்தமான பச்சிலை, கிழங்கு புல் முதலிய இந்திய வாசனைகளே சேர்க்கப்பட்டிருக்கின்றன. தினம், இதனைத் தலையில் தடவி வாரி வருவதினால் மயிர் கருப்புப் பட்டைபோல் பளபளப்பாகக் கருத்து ஆலம் விழுதுபோல் நீண்டு வளரும். இன்னும் இது, உஷ்ணத்தைத் தணித்து ஞாபக சக்தியையும், முகவசீகரத்தையும் உண்டாக்கும். கஷ்டப்பட்டு வேலை செய்தவர்களும் வெகுதூரம் நடந்தவர்களும் படுக்கும்போது சிறிது தைலத்தை உள்ளங்கை உள்ளங்கால்களில் தேய்த்துக்கொண்டால் காலையில் எழுந்திருக்கும்போது தேகம் ஆரோக்கியமாய் இருக்கும். 5 பலம் டின் 1-க்கு ரூபா 1. தபால் சார்ஜ் பிரத்தியேகம்.



## கூந்தல் வளரும் துளி



இதை நல்லெண்ணெய் அல்லது தேங்காயெண்ணெயில் கலந்து பிரதிதினம் மயிருக்குப் பூசிவந்தால் கூந்தலானது ஆலம் விழுதுபோல் உண்மையாய் வளரும். அதில் பேன் சேராது; சுண்டு உண்டாகாது; மயிர் உதிராது. வழுக்கை விழுந்த இடத்திலும் மயிர் முளைக்கும். புட்டி 1-க்கு அணா 12. தபாற்கூலி வேறு.

## ரூதக நிவாரணி மாத்திரை



ஸ்திரீகளுக்கு மாதாந்திர பஹிஷ்டை (ருது) கிரமமாக வெளிப்படாமல் காலந் தவறி வெளிப்படுதல், சிலகாலம் வெளிப்படாமலேயிருத்தல், வயிற்றுவலி, ஜுரம், மார்பு நோய், மயக்கம், கழுத்திசிவு, ஜன்னி தோஷங்கள், மஞ்சட் காமாலை, உணர்ச்சியின்றி சிறுநீர் பெருக்கெடுத்தல், மூர்ச்சையாகுதல், மார்பு படபடவென்று அடித்துக்கொள்ளுதல், மேல்மூச்சு வாங்குதல், மர்மஸ்தானத்தில் பொறுக்கமுடியாத வேதனை உண்டாகுதல் இன்னும் மாதர்களுக்குக் காணும் ருது சம்பந்தமான எல்லா வியாதிகளையும் கண்டித்து கருப்பகோசத்தைச் சரிப்படுத்திச் சந்தான விருத்தியை உண்டாக்கும், ஒரு டப்பி மாத்திரை விலை ரூபா 1.

---

**தனலட்சுமி கம்பெனி, 6, லாயர் சின்னதம்பி முதலி தெரு, மதராஸ்**

# அயத்தங்கத் திராவகம்

மித்திரர்களே! இந்த அபூர்வ மருந்தானது அநேக கொடிய வியாதிகளை ஆச்சரியமாகக் கண்டிக்கக் கூடியது. இதை அநேக ஆயிரக் கணக்கான ஜனங்கள் உபயோகித்துச் சந்தோஷிக்கின்றனர். வியாதியினாலாவது வேறு எந்தக் காரணத்தினாலாவது இளைத்துப்போயிருக்கும் தேகத்தைப் புஷ்டியாக்கி பலவிருத்தி தருவதில் இது நிகரற்ற மருந்தாகும். ஆங்கிலேய முறைப்படி தயாரிக்கப்பட்ட அருமையான மருந்து. சாப்பிடுவதற்கு மிக இன்பமாயிருக்கும். இருமல் நோய்கண்டு அவஸ்தைப்படுபவர்கள் இதை உட்கொண்டால் இரண்டே வேளையில் ஆச்சரியமான சுகத்தை யடைவார்கள். இதனால் உண்டாகக்கூடிய அநேக குணங்களில் முக்கியமான சிலவற்றை இங்கே குறிக்கிறோம்.



இது, நரைத்த மயிரைக் கருப்பாக்கும், உஷ்ணத்தினாலாவது, புழு வெட்டினாலாவது மயிர் உதிர்வதை நிறுத்தும்; இதனால் நீர் வியாதிகள் தீரும். கண்ணெரிச்சல், கைகால் காந்தல் இவை தீரும். இன்னும் இது முக வசீகரத்தை உண்டாக்கும். தேக அசதியை யோட்டும். ஜீரண சக்தியையும், நல்ல பசியையும் உண்டாக்கும். மனதை அதிக உற்சாகப்படுத்தும், நரம்புகளுக்கு அதிக வலுவைத் தரும், தேகத்தில் நல்ல இரத்தத்தைச் சுரப்பிக்கும், க்ஷயரோகத்தை க்ஷணத்தில் தீர்க்கும், சுத்த தாதுக்களுக்கும் நல்ல பலத்தைத் தரும், மூலச் சூடு, மூலவாய்வு, மலச்சிக்கல் ஆகியவை தீரும்.

இந்தச் சஞ்சீவியை நல்ல போஜனத்துடன் 15 நாள் சாப்பிட்டால் இணையில்லாத ஆனந்தத்தைத் தரும். மனிதர் தாம் இழந்துபோன தேகதிடத்தைப் பழையபடி யடைவதற்கு இதைவிட வேறு மருந்தே கிடையாது. ஒருவர் 40-நாள் மருந்தை உட்கொள்ளும்பக்ஷத்தில் அவனுடைய தேகம் வஜ்ஜிரமேயாகும். இதற்கு யாதொரு பத்தியமும் கிடையாது.

20-நாள் மருந்து விலை ரூபா 1. 40-நாள் மருந்து விலை ரூபா 1–12–0.

## காசா

காசம், இருமல், க்ஷயம் முதலிய வியாதிகளுக்கு நல்ல சிறந்த ஔடதமாகும். (இம் மருந்து மலையாள அஷ்டாங்க முறைப்படி) மலையாளத்தில் அநேகவிதமான வனமூலிகை உலோக வஸ்துக்களைக் கொண்டு முறைப்படி தயார் செய்தது. பத்தியமின்றி சாப்பிடலாம்.

30 நாள் 60 வேளை மருந்து விலை ரூபா 2—8—0.

## எலிக்ஸைரன்

பத்தியங் கிடையாது. ருசிகரமானது. இரத்த சுத்திக்கும் இரத்த விருத்திக்கும், தசை விருத்திக்கும், தாது பலத்திற்கும் இது ஒரு அமிர்த சஞ்சீவியாகும்.

20 நாள் மருந்து 40 வேளைக்கு உபயோகிக்கக்கூடியது. பூரண குணத்துக்குப் போதுமானது. விலை ரூபா 2—4—0.

---

**தனலட்சுமி கம்பெனி, 6, லாயர் சின்னதம்பி முதலி தெரு, மதராஸ்.**